# விஷயசூசிகை.

விஷயசூசிகை

# பிழைதிருத்தம்

| பககம. | பாட்ல. | வரி | பிழை. | திருததம. |
|---|---|---|---|---|
| 2 | 13 | 2 | பலதெளளி | பல—தெளளி |
| 3 | 19 | 1 | டாயநது | டமாநது |
| 11 | 75 | 3 | மாயுற | மாயவுற |
| 21 | 147 | 1 | கோலரசன | கோலரசன |
| 29 | 198 | 4 | டியிடை | டிடியிடை |
| 32 | 223 | 3 | பனறு | பதனறு |
| 38 | 258 | 2 | கேடடுளாகொல | கேட்டுளாயகொல |
| 45 | 310 | 2 | சேயோடும | சேயொடும |
| 48 | 331 | 1 | குறிடயுயான | குறியுடையான |
| 58 | 407 | 3 | சோதியான | சோதியான |
| 59 | 411 | 3 | ஊனயான | னஊனயான |
| 61 | 424 | 3 | கெடக | கேடக |

# செய்யுட்டிரட்டு.

## கடவுள் வாழ்த்து. 4714

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

3. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

4. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார். (ச)

(திருக்குறள்)

## கல்வி.

5. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

6. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

7. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

8. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

9. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(திருக்குறள்)

வேறு.

10. குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு.

11. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும யாங்காணேங் கலவிபோன்
மம்ம ரறுக்கு மருந்து.

12. வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறினவ்வார்
எசச மெனவொருவன் மக்கட்குச் செயவன
விச்சைமற் றல்ல பிற.

13. கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து.

14. கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈர மிலாளா தொடர்பு.

15. கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. (கக)

(நாலடியார்)

---

# தமிழின் சிறப்பு.

16. மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி, யிறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே, அறைகடல் வரைப்பிற் பாடை யனைத்தும்வென் றாரி யத்தோ, டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்.

(சீகாளத்திபுராணம்)

வேறு.

17. கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
யடுக்க வந்துவந் தாடுவா னுடன்மி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே.

18. விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தெனசொல்
மடம கட்கரங் கென்பது வழுதிநா டன்றே.

19. கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

20. தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

(திருவிளையாடற்புராணம்)

வேறு.

21. வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத், தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங், குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற், கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

22. இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியலவாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பு
மிருமொழியு மான்றவரே தழீஇயு ரென்றாலிவ்
விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ. (எ)

(காஞ்சிபுராணம்)

---

## நளன்சூதாடல்.

---

23. வாம்பரித் தேரி னானு மாமயிற் பொன் கண்ணி னாளும
எம்பலோ டினிது புல்லி யிடைவிடா தொழுகு நாளில்
ஆம்பலம் போது காட்டு மணிநகைப் பவளச் செவ்வாய்க்
காம்புறழ் தோளி னாட்குக் கருப்பமவ் துற்ற தன்றே.

24. குழைமுகங் கிழித்து நீண்ட கொழுங்கடை மழைக்கட் பேதை
பொழிகதிர்த் திங்கள் காட்டும் வலம்புரி வருந்திப் பொங்கி
ஒழுகொளி நிலவு காலு நித்தில முயிர்த்த தென்னா
மழகளி றனைய தோற்ற மாணிளங் குழவி யீன்றாள்.

25. மழகளி றனைய நயபி பிறையென வளரு நாளில்
கழைபுரை தோளி பின்னோர் கன்னியை யுயிர்த்தாண் மக்கள்
குழலினுங் கனிந்த வாக்கிங் குதலைகேட் டுருகி வெய்ய
முழைபுகு சீய மன்ன னுவகையின் மூழ்கி னானே.

26. நிழலுமிழ்ந் துதிரங் காலும வயிரவா ணிடந்த சோமான்
எழுபுவி வேந்தர் யாரு மிடுதிறை கொணர்ந்து நெஞ்ஞான் றுந
தொழுதன ரேத்தி நிற்பத் தொடுகட லுடுத்த ஞால
முழுவது மொருகோ லோச்சி முறைபுரந் தளித்தா னன்றே

27. கோவடு குருதி வேலான் கொழுஞ்சுடர் பட்ட காலை
சேவடி கழுவ லின்றிச் செய்கடன் கழித்த னோக்கிக்
காவலற் சேருங் காலங் கருதுபு பன்னி ராண்டு
மேவருந் தான்றி யுற்ற வெங்கலி மேயி னானே.

வேறு.

28. விட்புலத் தரசரு மேனை வேந்தரும்
வட்கவிம் மன்னவன் மல்லன் மார்பகம்
பெட்புறு மடந்தையைப் பிரிப்பன் யானெனப்
புட்கரன் பாற்கலி போயி னானரோ.

29. வருகலி புட்கரன் வதனை நோக்குறுக்
குரைகழ லளனெனுங் கொற்ற வேந்தனை
ஒருகுடை நிழலி னுலகங் காத்திட
இருநிலக் கிழமைநீ யிழந்த தென்கொலோ.

30. வாட்டிறல் வேந்தனை மடந்தை தன்னொடுங்
காட்டிடைப் புகுத்திமண் காத்த மன்னருந்
தாட்டுணை தொழுதற நாம நீண்முடி
சூடுவ னினியெனச் சொல்லி னானரோ.

31. சொல்லலுங் கலிமகிழ் தூங்கிப் புட்கரன்
கொலைபயில் வருதிறற் கூறு மைந்தரும்
மல்லடு திண்புய மன்னர் மன்னனை
வெல்லுமா றெங்ஙனம் விளம்பு வாயென்றான்.

32. எண்ணலை யாதுநா னிழைத்த வஞ்சனை
விண்ணவ ராயினும் விலக்கற் பாலரோ
அண்ணலைச் சூதினிற் படுப்ப லஞ்சனீ
கண்ணுறு மாயன்கொடுங் கலியென் றானரோ.

33. முழையுறை கொடுவரி யனைய மொய்ம்பினான்
உழையினிற் போதுமென் றுரைத்து வெங்கலி
மழவிடை யுருக்கொடு நிற்ப வண்சுடர்
இழைதவழ் மார்பினா னிவர்ந்து போயினான்.

34. உரவுநீர்க் கருங்கட லுலகு காவலன்
குரைகழல் பணிந்துதங் குறைகள் சாற்றுவான்
அரசர்கண் டுயிலமை முகிலி னார்ப்புறு
முரசுகண் டுயில்கிலா வாயின் முன்னினான்.

35. மன்னவற் கெம்வர வுரைத்தி வாயிலோய்
என்னலு மாங்கவ னெய்திக் கூறலும்
கொன்னவில் வேலினான் கொணர்க வென்றனன்
அன்னவன் வருகென வவையி னெய்தினான்.

36. களைகண தாகியோர் கவிகை நீழலில்
வளைகட லுலகெலாம் புரக்கு மன்னவன்
தளையவிழ் தாமரைத் தாளில் வீழ்ந்தெழும
இளவலோ டளவளா யிருக்கு மேல்லையில்.

37. கொல்சின வாகைவேற் குரிசின் மல்லலேற்
றெல்லுமிழ் மணிக்கொடி யுயர்த்த தென்னென
வல்லடு சூதினி லேற்ற மன்னரை
வெல்கொடி யீதென விளம்பி னானரோ.

38. சொல்லிய வவ்வுரை கேட்டுத் தூமணிக்
கல்லெனப் பணைத்துயர் கலைவைத் தோளினான்
வெல்கொடி யுயரிய விடலை சூதினீ
வல்லையே லாடுதும வருகென் றோதினான்.

39. நஞ்சினிற் கொடியவன் புணர்ப்பி னம்மிறை
வஞ்சகச் சூதினின் மனமுவைத தானென
அஞ்சில ரமைச்சரவ் வரசர் கோமகன்
செஞ்சாண் டொழுதிவை செப்பன் மேயினார்.

40. சீலநற் றருமமெய் சிதைக்குந் தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்
மாலுறுத் திடுங்கவ றாடல் மன்னகேள
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே.

41. கள்ளுணா விரும்புதல் கழகஞ் சேர்தன்மா
றுள்ளுறப் பிறர்மனை நயத்த லொன்னலர்க்
கெள்ளரு ஞாட்பினு ளிரியல் செய்திடல்
வள்ளியோ யறநெறி வழுக்கு மென்பவே.

42. ஐயநீ யாடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக் கியைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கின்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர்.

43. எள்ளுக சூதினை யிகலி வென்றதூஉம்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற வமைத்திடு முணவை யோர்கிலாப்
புள்ளின மருந்தின போலு மென்பவே.

44. கலைக்கடல கடந்துளார் கழறுங் கட்டுரை
சிலைத்தழும் பிருந்ததோட் செம்மல் கேட்டுயிர்
உலப்பினு மறுக்கிலே னுரைத்த வாய்மைநீர்
விலக்குவ தென்னென விளம்பி னனரோ.

45. மன்னவ னியைந்தவை மறுக்க லானென
இன்னலுற் றமைச்சராண் டிருப்ப வெங்கலி
துன்னிய தானுமூழ் துரந்த வாற்றினும்
முன்னருஞ் சூதினின் முயல்கின் றனரோ.

46. நிழலுமிழ் வயிரவா ணிடதர் கோமகன்
ஒழுகொளிப் பூணிரு யொட்டம் யாதெனா
மழவிடை யதனையான் வைப்ப னீயுமுன்
எழுகடன் ஞாலமு மியைக வென்றனன்.

47. சூழ்வினைப் புணர்ப்பினாற் சொன்ன வாறியைந்
தாழ்கடற் புவிதொழு மரச னுடவெங்
காழ்மனக் கொடுங்கலி கவற்றின் வண்ணமாய்
வீழ்தலும் புட்கரன் வென்றிட் டானரோ.

48. கழைசுளி புகர்முகக் களிறு தேர்பரி
இழைதவ ழிளமுலை மகளி ரீட்டிய
விழுநிதிக் குப்பைகள் வேலை சூழ்புவி
முழுவதுந் தோற்றனன் முழவுத் தோளினன்.

49. அனைத்தையுந் தோற்றனை யருவி பாய்கவுட
சினக்களி மால்களி றனைய சீற்றத்தோய்
மனத்திடை நினைக்குவ தென்னை வல்லைநின்
புனக்கொடிக் கியைந்தினிப் பொருதும யாமென்றான் (உஎ)

(நைடதம்)

## நளன் நகர் நீங்குதல்.

50. என்றலு முறுவலித் திசைக்க லாதனை
ஒன்றுநீ யுரைத்திட லுலங்கொ டோளினாய
வென்றநின் னகரவயின் மேவ லேனெனாத்
துன்றுகா னகஞ்செலத் துணிதன் மேயினான்.

51. வாட்டிறன் மன்னவன் கமல வாண்முகம்
ஈட்டரு மரசிய லிழந்த போதினும
பாட்டளிக் கூந்தல்வே தம்வயிற் றைந்தொடை
சூட்டிய ஞான்றினுந் துலங்கு கின்றதே.

52. சாமரை யிரட்டுந ரடைப்பை தாங்குநர்
தீமுகத் துமிழுமவா ளேந்திச் செல்குநர்
ஏமுற யாரையும விலக்கி யேந்துறுன்
கோமக னினிதுறை கோயி லெய்தினான்.

53. கற்றையங் கவரியுங் காலசெய வட்டமும
கொற்றவெண் கவிகையு மின்றிக் கோதைவேல்
மற்றடந் தோளினான் வருதல் காண்டலும்
முற்றதை யெவன்கொலென் றுள்ளத் தெண்ணினாள்

54. எண்ணிவந் திறைஞ்சிய வெழிற்கொம் பன்னவள்
மண்ணிய மணிநிகர் வதன நோக்குறாப்
புண்ணுழை வேலெனப் புகுந்த யாவையும
நண்ணலர்க் கடந்தவே னம்பி கூறினான்.

55. தாழ்தடக் கையினு னின்ன சாற்றலும்
வீழிவாய் மடமயில் வெய்து யிர்ப்பொடு
மாழ்கினள் வருந்தினண் மழைக்கண் ணீருகுத்
தூழ்வலி யிதுவென வுள்ளந் தேறினள்.

56. இந்திர சேனனென் றிசைக்கும் பேருடை
மைந்தனு மழலைவாய்க் கொடியு மாழ்குறு
துய்ந்திடக் கொண்டுபே ரோசை போயநின்
றந்தைதன் வளநகர் சார்க வென்றனன்.

57. உயிர்நிகர் மக்களோ டுலங்கொ டோளினன்
செயிரறு தந்தைபாற் செல்கென் றோதலும்
புயனறுங் கூநதலாள் புண்ணி னூடெரி
அயினுழைந் தாலென வலமந் தேங்கினள்.

58. நெடிபடு கானிடைத் தமியை நீங்கிப்போய்ப்
படுபா லமளிமேற் பள்ளி கொள்ளவெங்
கடிநக ரடைந்துமெல் லணையிற் கண்படில்
அடியனேற் கிதனினு மறனுண் டாங்கொலோ.

59. என்றவ ளுரைத்தலு மடங்க லேறனான்
மென்றளிர் கவற்றுநின் மெல்லென் சீறடி
கன்றவெம் பரல்படு கானி னேகுதற்
கொன்றுமே லெணதுயி ருய்யு மோவென்றான்.

60. பொற்பினுக் குறையுளாம் பொன்னங் கொம்பனாய்
அற்பினிற் பயந்தநம் மக்க ளாயிடை
எற்பிரிந் துறையுந ரேனு மெங்ஙனம்
நிற்பிரிந் தாற்றுவர் நிகழ்த்து வாயென்றான்,

61. கூற்றுறழ் குருதிவேற் குரிசின் மக்கடாம்
ஆற்றினு மாற்றலா தஞரின் மூழ்கினும்
மாற்றருங் கற்பினார் மகிழ்நர் கான்செல
வேற்றுநா டுறைவது விழுமி தோவென்றான்.

62. விரிகட லமிழ்தமும் வேலை ஞாலமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையு மெளிதி னெய்தலாம்
அருமகப் பெறுதன்மற் றரிய தென்பவே.

63. என்னனும் வணரிருங் கூந்த லேந்திழை
மன்னவ மழலைவாய் மக்க டம்மொடு
மின்னகு பரிதிவேல் வீமன் மாநகர்
துன்னுதும் யாமெனச் சொல்லி னளரோ.

64. கோற்றொடி செல்வர்பா லுறையி ரந்துமின்
றேற்றயின் றுயிர்சுமந் திருத்த லீறிலா
ஆற்றலு மானமு மறிவுங் கல்வியும்
மாற்றருஞ் சீர்த்தியு மாற்று மென்பவே.

65. மிக்கவெஞ் சயத்திடை வெருவி யோடினர்
ஒக்கறுன் புறத்தனி யுலகில வாழுநர்
புக்குவேட் டகத்தினி லுண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே.

66. என்றலுந் திருவுள மின்ன தாகுமேல்
மன்றலந் தெரியலாய் மக்க டம்மைநம்
மின்றிகழ் மானவேல் விதர்ப்பன் மாநகர்
சென்றிடப் பணித்தரு ளென்று செப்பினாள்.

67. தண்டலில் பாகனை நோக்கித் தாதுசேர்
வண்டிமிர் தெரியலான் வருந்தி மக்களை
விண்டொடு புரிசைசூழ் விதர்ப்பன் றன்னுழை
கொண்டனை போகெனக் கூறி னனரோ.

68. தழுவிய தாதைதன் முகமுந் தாயர்தம்
முழுமதி யனையவாண் முகமு நோக்குறு
விழிவழி நீருக விம்மி விம்மிநின்
றழுதனர் கண்டுளோ ரலக்க ணெய்தவே.

69. மடவர றன்னையு மதுகை வேந்தையும்
படுதுய ரொழிகென வாற்றிப் பாகனுங்
குடனுயிர் பிரித்தென வுவகை மக்களைக்
கொடிநெடுந் தேர்மிசைக் கொண்டு போயினான்.

70. மிகைப்படு துன்பமும் விழையு மின்பமும்
அகத்திடை நிகரென நோக்கு மையனும்
தகைப்பருந் துயரொடு தளர்ந்து சாம்புமேல்
மகப்பிரி வினுந்துயர் வலிதி யாவதே.

71. சிலதியர் பரப்பிய தேங்கொண் மெல்லிதழ்
மலர்மிசை மிதிப்பினும் வருந்து சீறடி
நிலமிசைப் படுபர லுறைப்ப நேரிழை
புலவுவேற் காளைபின் றொடர்ந்து போயினாள்.

72. மடவர றன்னொடு மதுகை வேந்தனைக்
கடிமுர சறுதகோ மறுகிற் காண்டலும்
இடியுறு மரவென வேங்கி யேங்கிநின்
றுடல்வெறுத் துயிருக வுழல்கின் றார்சிலர்.

73. மண்ணிய மணிவரை யனைய மார்பினான்
பெண்ணலங் கனிந்தவிப் பேதை தன்னொடு
நண்ணருங் கானிடை நடத்தல காணவோ
கண்ணினைப் படைத்தனன் கமலத் தோனென்பார்.

74. மல்லடு திணிபுய மன்னர் மன்னவன்
எல்லையி றுயருழந் தேகக் காண்டலும்
ஒல்லையில் வெடித்துயி ரொழிந்த தில்லையால்
கல்லினும் வலியதோ கவலு நெஞ்சென்பார்.

75. தாயினு மருள்புரி தரணி மன்னவன்
போயினன் கானிடை யென்ற போழ்தினின்
மாயுறப் பெற்றிலே மன்னர் மன்னன்பால்
ஏயபே ரன்பின ரெமமில் யாரென்பார்.

76. அடிதொழு மரசரு மமைச்சர் வெள்ளமு
மடவிய ரனைவரு மைந்த ரீட்டமுங்
கொடிநெடு வீதிவாய்க் குறுகி யெங்கணுங்
கடன்மடை திறந்தெனக் கலுழ்ந்திட் டாரரோ.

77. பொய்யுறு தீமொழி புகல்கி லேனெனா
ஐயநீ யெம்மையிங் கருளில வேந்துதன்
கையகப் படுத்தினை காணி லேகினின்
மெய்யினும் பொய்மையே விழுமி தாமென்பர்.

78. இன்னுயி ருய்யுமீங் கென்ற போழ்தினும்
பொன்னவிர் முலையினார் புலந்த காலையு
முன்னருஞ் சூதினும் பொய்மை மூரிவேத
கன்னவி றோளினாய் கழற லாமென்பார்.

79. எண்டிசைத் தலைவரு மெழில்கண் டேமுறத்
தொண்டைவாய் மடமயின் மாலை சூட்டுநாள்
புண்டரு கோட்டுவெங் களிறறிற் போதரல்
கண்டக ணிவற்றையுங் காணு மோவென்பார்.

80. மன்னவ னேகுதற் கிரங்கி மாழ்குநர்
துன்னருங் கானிடைத் தொடர்ந்து செல்குநர்
இன்னுயிர் செகுப்பலென் றிசையில் புன்மையோன்
அந்நக ரிடைமுர சறைவித் தானரோ.

81. வசைபடு மன்னவன் வாய்மை யாலறை
விசிமுழ வொலிசெவி வெதும்பக் கேட்டலும்
இசைபடு மன்னவற் கிரங்கி னோரெலாம்
அசுணமென் புள்ளென வலமந் தேங்கினார்.

82. வருந்திமுன் போதரு மமைச்சர் வாண்முகம்
புரிந்தன னோக்கிய பொருவில் வாய்மையான்
விரிந்தநூற் கேள்வியி ரறத்தை வேரொடும்
அரிந்தணி ரெற்பிரிந் தாற்ற லாமையால்.

83. மேவருஞ் சூதினிற் றோற்ற மேதினி
யாவதும் வென்றல தாள வெண்ணுதல்
கோவியல் பன்றாவ னாணை மேற்கொடு
நீவிரென் வாய்மையை நிறுத்து வீரென்றான்.

84. முள்ரியால் வெந்தவெங் கானின் மொய்துகள்
அளியொடு புலம்பின ரழுத கட்கடைத்
துளியினி லவித்தனர் தொடர வெந்திறற்
களிமதக் களிற்றினான் கானி னேகினான்.

5. திருகுவெஞ் சினக்கலி செல்வன் பின்றொடர்
பரிசனம் யாவுமெய் பதைத்து மீடர
முருகுறழ் பொற்பினான் பின்ன ரேகிய
அருநெறி தெரிவுறா வஞ்ச மாற்றினான்.

ஆற்றுவஞ் சனையினா லழகு வாய்ந்தபொற்
கோற்றொடி தன்னொடுங் கொற்ற மன்னவன்
தோற்றுதல் காண்கிலார் துயர மெய்தினின்
றூற்றெழு கண்ணின ருள்ள மாழ்கினார்.

87. ஆயினு மினிதருள் புரியு மெம்பிரான்
தூயமென் மலரடிச் சுவடு காண்கிலேம்
போயினன் யாண்டெவர் புணர்ப்பி னாயதிம்
மாயமென் றருநெறி மருங்கிற் றேடுவார்.

88. தேடினர் புகுமிடங் தெரிய லாமையின்
வாடின ரருநெறி மருங்கி னோர்வழிக்
கூடின ரின்னுயிர் கூற்றங் கைக்கொள
வீடின ராமென வீழ்ந்து விம்மினார்.

89. கொன்னுனை யலங்கல்வேற் குவவுத் தோளினான்
சென்னெறி கண்களிற் றெரியக் காண்கிலர்
இன்னலுற் றழுதழு தேங்கி யேங்கியத்
தொன்னக ரடைந்தனர் தொடர்ந்து ளோரெலாம்.

90. பறவைகள் குடம்பையுட் பார்ப்ப ருத்தில
கறவைகள் புனிற்றிளங் கன்றுக் கூட்டில
நறவுயிர்த் தலர்கில மலர்க ளுமவேல்
இறைவனே யினன்வனத் தென்ற பின்னரே. (௯௰)
(நைடதம்)

## தமயந்திபுலம்பல்.

91. நள்ளிருட் போதுவெங் கானி னுமவேல்
அள்ளிலைப் பூணினு னகன்று போதலும்
விள்ளருந் துயரொடு மெலிந்து கண்படும்
பிள்ளைமா னேக்கிதன் செய்கை பேசுவாம்.

92. நீடிய துயில்சிறி துணர்ந்து நேரிழை
ஆடகத் தொடிக்கையா லணைக்கக் காண்கிலாள்
ஊடினள் பதைத்தன ளுயிர்ப்பு வீங்கினள்
தேடினள் காந்தளஞ் செங்கை நீட்டியே.

93 ஆயிடைக் காண்கிலா தழுங்கிச் செங்கடை
பாயரி நெடுங்கணீ ரருவி பாய்தரத்
தூயமென் மலர்க்கர நெரித்துத் துண்ணென
வாய்வெரீஇ யால்வயி றதுக்கி மாழ்கினாள்.

94. தெளித்தபூம் பள்ளியிற் சிறிது நீங்கினும்
அளப்பருந் துயரொடு மவல மெய்துவேன்
றளிப்பெயற் கங்குலிற் றமியண் மாறகுற
ஒளித்துநீ தனிவிளை யாடி லுய்வனே.

### வேறு.

95. கான்று ருயிரொழுகக் கண்ணீர் கவுளலைப்ப
ஊன்றோய் கணைபட் டுழலும் பிணையொத்தேன்
மான்றே ரரசர் முடியுழுத வார்கழற்காற்
றோன்றலென் கண்களிப்ப வின்னமுமென் றோன்றிலையே.

96. நேரலார் போரேறே நிடதத்தார் கோமானே
ஆரவரை மார்பா வளியே னுயிர்க்குயிரே
காரிருள்வா யான்புலம்பக் கானகத்து விட்டகன்றுஞ்
சாரலையா வின்னு மிதுவோநின் றண்ணளியே.

97. நெஞ்ச மெலிவே னினது தடந்தோளுங்
கஞ்ச மலர்முகமுங் காணாது கண்பனிப்ப
மஞ்சுதவழ் வெற்பெறிந்த வச்சிரத்தோ னன்றளித்த
விஞ்சை பயின்று விளையாட் டயருதியே.

98. ஞாலத் திருணடப்ப நாட்கமலம் வாய்நெகிழ
வேலைத் திரைமுகட்டில் வெய்யோ னெழுந்தனனால்
மாலைக் கதிர்வடிவேன் மன்னர்பெருமானே
காலைக் கடவ கடன்கழிக்க வாராயே.

99. மன்னவனே யிப்பிறப்பிற் கண்டு மணந்திலனேல்
இன்ன மொருபிறப்பி லானாலு மேழையேன்
றன்னந் தனியே யிருந்துதவ மாற்றியுமுன்
பொன்னகல முள்ளுருகப் புல்லா தொழிவேனே.

100. வாவு மிளமான்காண் மயில்காண் மடப்பிடிகாள்
கூவுங் கரிய குயில்காண்மென் புள்ளினங்கா
ளாவி யெனமேவி யகலே மெனவகன்ற
காவலன்றான் போன வழியெனக்குக் காட்டீரோ.

101. என்று வுருகி யிருகண்ணீ ராலியுகத்
தன்னுத் தழும்பப் புலம்பித் தமியளாய்
மின்று ரிடைநுடங்கச் செல்வாள் விறல்வேந்தன்
பொன்று ரடிநோக்கிப் பூங்கொடிபோல் வீழ்ந்தழுதாள்.

(நைடதம்) (கக)

## நளன் கடற் கரையிற் செல்லுதல்.

102. நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளுங்
கனற்புகைய வேகின்றான் கண்டான்—பனிக்குருகு
தண்படா நீழற் றனிப்பேடை பார்த்திரவு
கண்படா வேலைக் கரை.

103. கொம்பரிளங் குருகே கூறா யிருத்தியால்
அம்புயத்தின் போதை யறுகாலால்—தம்பி
திறக்கத்தே யூதுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனைக் கொன்று.

104. புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்—இன்னருள்கண்
டஞ்சினா னாவி யழிந்தா னறவுயிர்த்து
நெஞ்சினா லெல்லா நினைந்து.

105. காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ னோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை.

106. பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்
கானலே வேலைக் கழிக்குருகே—யானுடைய
மின்னிமைக்கும் பூணாளை வீங்கிருள்வா யாங்குணர்ந்தால்
என்னினைக்குஞ் சொல்லீ ரெனக்கு.

107. போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று.

108. முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்—பொன்னீர
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு. (எ)

(நளவெண்பா)

## நளன் கலிநீங்கி அரசாட்சியடைதல்.

109. முந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரைத்
தாதுன்று மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
ஓதுகின்ற ஊர்கின்ற தேர்.

110. மேலாடை வீழ்ந்த தெடுவென்றா னவ்வளவில்
நாலாறு காத நடந்ததே—தோலாமை
மேல்கொண்டா னேறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

111. இத்தாழ் பணையி லிருந்தான்றிக் காயெண்ணிற்
பத்தா யிரங்கோடி பாரென்ன—உய்த்ததனில்
தேர்நிறுத்தி யெண்ணினான் றேவர் சவைநடுவே
தார்நிறுத்துந் தோள்வேந்தன் றான்.

112. ஏரடிப்பார் கோலெடுப்ப வின்றேன் றொடைபீறிக்
காரடுத்த சோலைக் கடனாடன்—தேரடுத்த
மாத்தொழிலு மித்தொழிலு மாற்றுதியோ வென்றுரைத்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து. [தான்

113. வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பா னின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பா னின்ற கலி.

114. ஆமை முதுகி லலவன் றுயில்கொள்ளுங்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்றன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்றம்
அன்னகரி யொன்றுடையா னங்கு.

115. வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயின்
முற்றத் திருத்தி முறைசெய்யுங்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து.

116. கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென்.

117. இன்றுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்ஙன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன்—என்றான்
ஒளியார்வேற் கண்ணுண்மே லுள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய்.

118. ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து.

119. ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாம லெல்லா நிரம்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை.

120. இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த [தொழில்கள்
கொடைத்தொழிலா னென்றுயிர்த்த கோமான்—மடைத்
செய்கின்ற தெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்று
ணைகின்ற நெஞ்சா னயந்து.

121. கோதை நெடுவேற் குமரனையுந் தங்கையையும்
ஆதி யரச னருகாகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செயலு டென்றாள்
வளையாடுங் கையாண் மதித்து.

122. மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மகக ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

123. மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட் டவனேக—இந்நகர்க்கே
வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றா னென்றா ரழுது.

124. ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்—பூங்காவில்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து.

125. உங்க ளரசொருவ னுளனீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி யெடுத்து.

126. நெஞ்சாலிம் மாற்ற நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி.

127. எந்தை கழலிணையி லெம்மருங்குங் காணலாம்
கந்து சுளியுங் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியிற் றேய்ந்த வடு.

128. மன்னர் பெருமை மடைய ரறிவரோ
உன்னை யறியா துரைசெய்த—என்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண்.

129. கொற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்றா னாங்குரைத்த வாசகத்தை—முற்றும்
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தா ளழுது.

130. மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்கா ணுங்கள்
கொடைத்தொழிலா னென்றாள் குறித்து.

131. போதலருங் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்—ஓதம்
வரிவளைகொண் டேறும் வளநாடன் றன்னைத்
தெரிவரிதா நின்றான் றிகைத்து.

132. செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கும்
ஒவ்வாது கொண்ட வுருவென்னா—எவ்வாயும்
நோக்கினா னோக்கித் தெளிந்தா னுணங்கியதோர்
வாக்கினான் றன்னை மதித்து.

133. பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று—மந்தி
தெளியா திருக்குந் திருநாடா வுன்னை
ஒளியாது காட்டுன் னுரு.

134. அரவரசன் முன்கொடுத்த வம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி யுடுத்தான்—ஒருதுகிலைப்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையாற் பூண்டளிக்குங்
கோத்தாய முன்னிழந்த கோ.

135. மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

136. தாதையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீரரும்பப்
போதலருங் குஞ்சியான் புக்கணைந்து—கோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து.

137. வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும் வீழ்துயில்கொள்
அவ்விடத்தே நீத்த வவரென்றே—இவ்விடத்தே
வாரார் முலையாளம் மன்னவனைக் காணாமல்
நீரான் மறைத்தனவே நின்று.

138. உத்தமரின் மற்றிவனை யொப்பா ரொருவரிலை
இத்தலத்தி லென்றிமையோ ரெம்மருங்கும்—கைத்தலத்தில்
தேமாரி பெய்யுந் திருமலர்த்தார் வேந்தன்மேற்
பூமாரி பெய்தார் புகழ்ந்து.

139. தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறைமைக்கும்
பூவுலகி லொப்பாயார் போதுவார்—காவலனே
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றன்பாற் பாரளிப்பான் முன்.

140. உன்சரிதஞ் செல்ல வுலகாளுங் காலத்து
மின்சொரியும் வேலாய் மிகவிரும்பி—என்சரிதங்
கேட்டாரை நீயடையே லென்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மதித்து.

141. என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடையேன்
மின்காலயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி.

142. வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையு மக்களையுங் கொண்டுபோய்த்—தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து.

143. விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினான்—முற்றும்பல்
தேனீ ரளித்தருகு செந்நெற் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மன்.

144. மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்—சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்ததொரு
பூவிந்தை வாழும் பொழில்.

145. மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்டெரியற் றேர்வேந்தன் றான்.

146. மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தூய நறுமலர்ப்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர்.

147. செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினவினான்—அங்கோலக்
காவற் கொடைவேந்தே காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று.

148. தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியம்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து.

149. அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து.

150. அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லா னளனென்று போற்றிசைக்குங்
கோவேந்தர்க் கெல்லாங் கொடுத்து.

151. ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்பொலிந்து
நன்னகரம் புக்கா னளன்.

152. கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர். ([illegible]௩)

(நளவெண்பா)

---

## காலம்.

---

### இளவேனிற்காலம்.

153. நமதுசெங் கரங்க டோயி னகைமுக விருந்து செய்யுங், கமலநாண் மலரை வாட்டும் பனியினைக காய்து மென்றே, இமயமால் வரையின் வெம்போர்க் கெழுந்தென வுலகம் போர்த்த, திமிரமேய்ந் துலவும் வெய்யோன் சென்றனன் வடபான் மன்னோ.

154. கள்ளுயிர்த் தலரு முல்லைக் கடிமுகை முறுவ லேன்ற, வள்ளிதழ்க் குவளை யுண்கண் மலர்ந்துமாந் தளிர்மென் கையாக், கிள்ளைமென் குதலை சாற்றிக் கிளரொளி வண்டு பாணாத், தெள்விளி பாட வேனிற் றிருமகள் சிறந்தா ளன்றே.

155. குன்றிடைப் பிறந்த தென்றற் கொழுந்துமேற் படர்ந்த தன்மை, துன்றிருட் பிழம்பு சீக்குங் கனைகதிர்ச் சுடரோனாய, தன்றுணைக் கேள்வ னீங்கி வடபுலஞ் சார்த லோடுந், தென்றிசை யணங்கு மாழாந் துயிர்த்தது சிவணு மாதோ.

## வேறு.

156. முள்ளரை முருக்கு மந்தி முளையிளந் திங்கள் காட்டுங்
கள்ளக முகிழ்ப்ப லாசுங் கடிமல ரவிழ்ந்த தோற்றந்
தள்ளவில் சிறப்பின் வேனி றண்பனிப் பகையி ருந்த
வொள்ளெழி னகர மெல்லா மொருங்கெரி யூட்டிற் றன்றே.

157. இங்ஙில வரைப்பி னுள்ளோர் யாவர்க்குங் கேள்வி யின்பங், *தன்னொடு பிறந்த வந்தீந் தமிழ்கொடுத் தாங்கு விண்ணோர்.பொன்னக ரணவு கோட்டுப் பொதியமீன் குழவித் தென்றன், மன்னிய வுயிர்கட் கூற்றின் வருமின்பம் விளைத்த தன்றே. (ரு)

(சீகாளத்திபுராணம்)

## முதுவேனிற்காலம்.

158. இன்னிள வேனில் செல்ல விருங்கடல் சுவற விண்டோய்
சென்னியங் குன்ற மெல்லாந் திசைமுக மழற்றச் செங்கே
பன்னிரு சுடரு மொன்றாய்ப் பகற்கதிர் பரப்பி யாங்கு[ழ்ப்
மன்னுயிர்த் தொகைவெ துமப வநதது முதிய வேனில்.

159. வெந,நழ னிலத்து வெண்டேர் மென்புன லெனம யங்க
விநதிர சாலஞ் செயத தெறிவளி மரமுந் தீய
நந்தவில் பெருஞ்சி றப்பு நலகுகண் ணோட்ட மில்லாச்
சிந்தையர் கடுஞ்சொல் லென்னத் தீமுகந திறைத்த தன்றே

160. நீடழல் வெஞ்சு ரத்து நீரின்றி நாவு லர்ந்து
வாடுபு நிழல்பெ றாது வருந்துபு திரியு மாக்கள்
கோடிய கோல முகிக் குடிகெட வலைக்குங் கல்லார்க்
கூடிய வறனில வேந்தன் குடைபெறாக் குடிக ளொத்த.

161. நெடுநெறி மரங்க ளெலலா நீணிழி யோடு சுற்றத்
தொடர்புடை யவர்போன் மக்கட் டொகுதியாற் சூழப் ப
தொடுகழல் கிழிக்குங் கூர்ங்கற் சுடுபர லொடுவி ராய[ட்ட
வடுதழற் சுரங்க ளெல்லா மாள்வழக் கற்ற வன்றே.

(சீகாளத்திபுராணம்)

## வேறு.

162. மண்கொதிப்ப வறல்கொதிப்ப வளிகொதிப்ப வெண்ணுவா
ரெண்கொதிப்ப நறுநீழ லியைமனைவிட் டகலார்க்குங்
கண்கொதிப்பக் கரங்கொதிப்பக் கால்கொதிப்பக் கற்பகஞ்
விண்கொதிப்ப வவ்வேனில் வெம்பருவ மேவியதால். [சார்

163. குலவுதனை விழுங்குவகை கொண்டகோட் கினமாகி
யிலகரவ நாடனைத்து மிதுசமய மெனப்பரிதி
பலகதிரும் புகுத்துடற்றப் பண்ணியசெவ் வழிபோலு
நிலமகட னுடல்வெடிப்ப நேர்தோன்றும் பெருங்கமர்கள்.

164. நலக்கதிர்செய் நம்பகையை நான்மறையோ ரிதுகொ
ண்டே,விலக்குவர்நாங் கொண்டிருப்பின் மேவாதெப் பகை
யுமெனப், புலத்தமைத்துக் கவர்ந்தான்போற் பொய்கைகுள
ங் கானதிமுன், னிலத்தமைத்த நீரெல்லா நெடும்பரிதி கவ
ர்ந்தனனால்.

165. தெள்ளுபுன னசைமிக்குத் திரிமருப்பி னிரலையெலா,
நள்ளரிய பேய்த்தேரின் பின்றொடர்ந்து நலிந்திடுமால், வள்
ளலென வெளிக்காட்டி வஞ்சிக்கு முலோபர்கள்பி, னெள்
ளுவறு மைப்பிணியோர் தொடர்ந்துதொடர்ந் திளைப்பது
போல்.

166. காலோடை வாவிகுள முதலாய கணக்கிலவன்
மேலோடும் புனல்வறப்ப வவற்றுறைமென் பறவைகணற்
பாலான வொருவனிடம் பற்றியினி துண்டகிளை
யேலாத்துன் பவனுறுங்கா லிரிவதென விரிந்தனவால்.

167. வாவிகாள் குளங்காணீர் வற்றினீர் முன்னளித்த
மேவியவின் சுவைப்புனலால் வீங்கினே மிதுபொழுது
பாவியவப் புனலளிப்பேம் பற்றுமெனக் கால்வதுபோற்
பூவியன்மக் கள்ளுடம்பு பொங்குவெயர் நீர்காலும்.

168. வாங்குகட லகம்புகுந்து வடவைவதி வதையறிந்தா
மோங்குகடல் சுவற்றவென வுலகுரைத்த லதுபொய்யே
தேங்கியவிப் பருவத்தாற் செறிவெப்பிற் காற்றுமை
யாங்குகுளி ரிடந்தேடி யஞ்சியொளித் ததுபோலும்.

169. இத்தகைய வேனிலிடை யிரும்பசியா லறமெலிந்தும்
பைத்ததரு நிழலிருந்தும் பள்ளமெலா மாராய்ந்துந்
தத்துபுனல் கிடையாமைத் தாகத்தால் வாய்புலர்ந்துஞ்
சுத்தவிர தத்தவநற் றுறைநின்றோன் செல்லுமால். (கஉ)

(குசேலோபாக்கியானம்)

## கார்காலம்.

170. குயிலொலா மன்ன மென்னக் குறைகட னுடிச் சென்று
வயினிரு புடையும் விம்ம வாய்மடித் துண்டு தோகை
மயில்கள்போற் குன்ற நாடி வந்துநீள் சிமய முற்றி
வியனிரு விசும்பெ மூந்து விரிகட லுமிழ்ந்த மன்றே.

171. தடங்கடல் குறைய வுண்ட தழங்குரற் கொண்டல் வா
ன, மடங்கலுங் கவிந்து விண்டோ யடுக்கல்கள் புதைய
நின்று, குடங்கொடு சொரிவ தென்னக் குளங்கள்கோ டு
டைய வெய்யோன், சுடுங்கதி ருலகம் வேட்பச் சோவெ
னச் சொரிந்த தன்றே. (உ)

(சீகாளத்திபுராணம்)

## கூதிர்காலம்.

172. உடலல்ல தனிரிலுக் குடைந்த வில்லவர்
தடவிரு ணெருப்பினைத் தணத்த லஞ்சிறா
கடவுளர் பசிப்பிணி களையும வேள்வியிற
சுடரழல் பிரிகலாத் தொழுகு லத்தர்போல்.

173. தண்டையஞ் சிறடித் தருண மைந்தரும்
வெண்டயிர் வெண்ணெயமோா வெறுத்து வேட்டன
ருண்டொறும் வெய்யன வுணவு ரிடங்
கொண்டன வுயிர்களுங் குளிர்கது டைந்தவே.

174. எரிசுடர் நெருப்பைப் பென்ன வேட்டனர்
தருகுளிர் நீரினைத் தழுவி னஞ்சிறு
திருசெவி களுந்துகி லிறுகச் சுற்றுபு
விரனிரை மறைபட மெய்ப்பை புக்கனர். (௩)

(சீகாளத்திபுராணம்.)

## பனிக்காலம்.

175. திருமலா முதலிய திகைப்பப் புன்புலம்
வருவன பயிர்சில மகிழ வந்தன
விருபனி யிருதுவும் யாவர் யாவர்க்கு
மொருநிகர் நடையின ருலகிற் றேறினே.

176. கண்ணக னுலகெலாங் கவைஇய தண்பனி
விண்ணுயர் வரைகளும் வேலை ஞாலமு
மண்ணணி டிமயமு மதனைச் சூழ்தரு
மண்ணுமா யினவென மருளச் செய்ததே.

177. வளர்பசும் புற்செறி வயின்ரெறு றும்பனித்
துளிசுட ரிளங்கதிர் தொடவி ளங்குவ
வொளிர்மர கதத்தக டுறவ ழுத்திய
நளிகொள்செம் மணிகளை நகுதல் செய்யுமே. (ரு)
(சீகாளத்திபுராணம்)

## நட்பினர் பிரிவாற்றுமை.

178. தடையில்பே ரறிஞர் தம்மைத் தனித்தனி விளித்து நும்
டுடனுறை வாழ்வு நீங்கு மொருபெரும் பாவி யேனை [மோ
மடனறு நமரங் காணீர் மறவன்மி னென்று தன்மெய்ப்
படுபிணி நோக்கி மார்பம படத்தழு வாது நின்றான்.

179. நாவல ரதைய றிந்து நண்ணிமார் பிறுகப் புல்லி
யோவில்கண் ணருவி பாய வுளங்குழைந் தழுது நல்லோய்
மேவரு நின்னை நீத்து வெறுவிய மிருப்ப நின்ற
வாவவல் வினையு ளார்யா மல்லதிவ் வுலகத் தியாரே.

180. என்றன ரிரங்க மேலோ னெதிர்தழீஇத தழுவி யாறிக்
குன்றனீர் சிறியற் காகக் குழைந்தழு றமியேன் செல்வல்
பொன்றலி னட்பி னுக்குப் புணர்வொடு பழகல் வேண்டா
நின்றநல் லுணர்ச்சிதானே நிறைக்குமென் றுணர்ந்த நல்லீர்.

181. என்றுப சரத்தாற் கூறி யிணையிலா னரிதி னீங்கிச்
சென்றனன் புலவர் கண்ணுஞ் சிந்தையுந் தொடர்ந்து செ
ல்லத், தன்றிரைக் கையான் மோதித் தான்றியங் குலையு தி
ர்க்கு, மன்றலம் புதுநீர் வையை வடகரை கடந்து மன்னோ

182. என்றினி மதுரை காண்பே மெப்பகல் சவுந்த ரேசன்,
தன்றிரு வடிகள் காண்பேந் தாயையெஞ் ஞான்று காண
பேம், வென்றிவேற் றரும வேந்தர் வேந்தனை யெந்நாட்
காண்பே, மொன்றுயிர்த் துணையாஞ் சங்கத் துறவையெப்
பொழுது காண்பேம்.

183. நுணங்குமா ணறிவின் மிக்க நூல்வலார் மறப்பர் கொல்லோ, வணங்குதேர்த் தானை மன்னர் மணிமுடி யுழுக மூழ்கா, லணங்குடை யரிமான் றுப்பி னரசர்கோ னினையான் கொல்லோ, வினங்குநூற் புலவர் நாற்பா னெழுவரென் றுரைக்குங் கொல்லோ.

184. இனித்தமி ழினிமை யாவர்க் கெடுத்திசைத் திடுவ மன்னோ, வெனப்பல பலவு மெண்ணி யினைந்துவெஞ் சுரமிறந்து, புனற்றிரு நாடு புக்குப் பொருதிரைப் பெண்ணை நாடு, தனைக்கடந் தந்தண் பாலித் தண்ணடை கண்டு சென்றான். (எ)

(சீகாளத்திபுராணம்)

## கருப்புக்காலம்.

185. காலை தண்பனி சொரிதலு நண்பகற் கால
நீல வான்புதை முகிலினம் பெய்வபோ னின்று
மாலை தோன்றுமுன் மலர்தலை வான்கழு வியது
போல நீங்கலு நிகழ்ந்தன மழைவளம் பொன்ற.

186. பெயல்வ றந்தபைங் கூழெலாம் பீளொடு கரிந்த
பயர்வ றந்தன மரங்களு மலைகளும் பனிநீர்க்
கயம்வ றந்தன கள்ளியும் பெண்ணையுங் கதிரின்
வெயிலின் வெந்ததம் பசுமைபோ யுலர்ந்தன மிகவும்.

187. உண்ப தின்பன நனிமிகக் குறைந்தன வொருங்கு
வெண்க லங்களும் வெள்ளியுஞ் செம்பொனும் விளங்கு
மண்கொ ளொன்பது வகையநன் மணிகளு மலிந்த
வெண்ப தம்பெற லரியதா யிற்றுமன் யார்க்கும்.

188. நீடுந் தீப்பசி யாற்குடர் கொளுந்திய நிலத்தோ
ராடுந் தின்கலா வடருநின் றனர்நில னகழ்ந்து
வாடும் பல்வகைக் கந்தமுந் தின்றனர் மக்கள்
காடுங் குன்றமு நிரம்பினர் தின்பன கருதி.

189. சிறுவர் கையன தாயர்தாம் பறித்தனர் தின்றார்
முறுகு தீப்பசி பொறுக்கலார் மக்களுந் முதலா
வுறுப சுந்தசை யாவையுந் தின்றன ருலகத்
தறைப ழஞ்சொலைப் புதுக்கினர் மானமாண் பற்றார். (ஏ)

(சீகாளத்திபுராணம்)

## வறுமை.

190. தரித்திர மிக்க வனப்பினை யொடுக்கிச் சரீரத்தை யுல
ர்தர வாட்டுந், தரித்திர மளவாச் சோம்பலை யெழுப்புஞ் சா
ற்றரு முலோபத்தை மிகுக்குந், தரித்திரந் தலைவன் றலைவி
யர்க் கிடையே தடிப்பருங் கலாம்பல விளைக்குந், தரித்திர
மவமா னமபொய்பேராசை தருமிதிற் கொடியதொன் றிலை
யே.

191. தரித்திரங் களிப்பாங் கடலுக்கோர் வடவை, சாற்று
மெண்ணங்கள்வா ழிடமாந், தரித்திரம் பற்பதுக்கமுந் தோ
ன்றத் தக்கபேராகர மென்ப, தரித்திர நன்மை சாலொழுங்
கென்னுந் தழைவனந் தனக்கழ லாக, தரித்திரங் கொடி
ய வெவற்றினுங் கொடி தத்தகை யதை யொழித்தனன்றுமே.
(குசேலோபாக்கியானம்.) (உ)

## செல்வச்செருக்கு.

192. தெறுகி ரப்புளோர் வாழ்ந்திடு செல்வர்பாற் செல்வ
ரேன் மதியார்கண், மறுவு றுத்தவ மானமு மியற்றுவா மா
னமுள் ளவராயிற், குறுகு மவ்வவ மானந்தா லுயிர்விடுங்
கொள்கையிற் றலைநிற்பார், நறும லர்க்குழ லாய்தலா லவரி
டை நண்ணனன் றெனவெண்ணல.

193. ஒன்றும் வேண்டல ராயினுந் தொண்டர்பா லுவந்தடி யவ
ர் சார்ந்தா, லின்று வந்தமை யாதினைக் கருதிய றிவரென
வுளத்தெண்ணிக், கன்று மாழ்பல் குறிப்புரை நவிற்றுவா
காதலி னவர்பாற்போய், மன்ற வந்தது சிறுமையே யிவாக்
கன்றி மற்றிலை யறிபாவாய். (உ)
(குசேலோபாக்கியானம்)

---

## குசேலர் தம்மனைவிக்கு உண்மை யறிவுறுத்தல்.

---

194. மக்களுக் கிரங்கி வாடு மடத்தகை யணங்கு கேட்டி
தக்கமுற் பவத்தி லான்ற தருமங்கள் செயற்றி னோர்க
ளொக்கவிப் பவத்தி லின்ப மொருங்கனு பவிப்ப ரின்றேல்
மிக்கவெந் துயரத் தாழ்வ ரிகழ்ச்சுள பெலிய லெல்லே.

195. துப்பிதழ மடந்தை நல்லாய் தோன்றிய சீவ ரெல்லா
மிப்புவி யிடத்துச் சால வெண்ணுவ ரெண்ணியாங்கே
யெப்படி முற்று முற்று தெம்பிரா னொருவற் கன்றி
யப்படி முற்றிற் றீமே லாம்பகுப் பிரண்டுண் டாமோ.

196, தேற்றமுற் பவத்திற் செய்த தீங்குநன் கெனுமி ரண்டு
மாற்றல்சால் கரும மென்ப ரக்கரு மத்தை நோக்கிச்
சாற்றுமிப் பிறப்பிற் றக்க தரித்திர ரு செலவ நல்கிப்
போற்றுவ னுயிரை யெல்லாம் பொலிசுடர்த் திகிரிவள்ளல்

197. மைந்தாக டம்மைப் போற்ற வளநிதி வேண்டு மென்றாய்
நந்திய பாவை கான நயந்துறை விலங்கு முன்னு
வந்தபல் லுயிர்க்குச்சேம வைப்புண்டோ வருவாயுண்டோ
வெந்திடத் தேனும் போயொன் றிரப்பது தானுமுண்டோ

198. அல்லது நாளைக் கென்செய் வாமெனுங் கவலை யுண்டோ
வெல்லையிலொன் றிலொன் றிடிப்புண்டுவாழ்தலுண்டோ
யொல்லுமவ் வுயிர்க டமமு ளுணவிலா திறந்த துண்டோ
சொல்லரி பரந்த வுண்கட் டுயிடைப பேதை மாதே.

199. கல்வினும் சிறுதே ரைக்குங் கருப்பையண் டத்து யிர்க்கும், புல்லுண வளித்துக் காகரும் புனத்துழாய்க் கண்ணி யண்ண, லொல்லுநின் மைந்தர்க் காவா தொழிவனோ வொழியா னுண்மை, மெலவியல் கொண்ட துன்பம் விடுவிடு மறந்து மெண்ணல.

200. உரைத்தகன் முதலி டப்பல் லுயிர்க்கெலா முணவே யின்று, வரைத்தவன் வுயிரவ் வாழு வழங்குத லியல்பே யென்னிற், றரைத்தலை வந்த ஞான்றே சலமலம் விடுத்த லுண்டே, விரைத்தபூங் குழலாய் துய்க்கு முணவின்றி மேவுமேகொல்.

201. அலரவன் றீட்டி வைத்த வாயுளி னளவை காறும்
விலகிலா வினைக்குத் தக்க விருப்புறு வெறுப்பு றுவு
மிலகவுண் டின்றே யின்று மின்னுயி ருடம்பின் வாழ்தன்
மலர்தலை யுலகத் தென்று வகுப்பர்நூ லுணர்ந்த வல்லோர்

202. ஆதலி னினது மைந்தர்க் காயுளுள் ளளவை கூறு
மோதிரு வினைக்குத் தக்க வுணவுண்டு புந்தி மாழ்கே
லேதுவந் தாலு மூழா லெனநினைந் திருத்தல் வேண்டு
மாதர்வாண் முத்த மூரன் மயின்மரு ணடைப்பூங் கொடியே

203. வளநிதி படைத்தோ மென்றும் வடிவலி லுடை யோ மென்று, மளவில்சே யின்றோ மென்று மனுபவத் தமைந்தோ மென்று, மிளமையிற் சிறந்தோ மென்று மெழி னல முடையோ மென்று, முளமகிழ் கூர்வர் சற்று முண் மைநா லுணர்ச்சி யில்லார்

204. உயிர்க்கொலை புரித லுண்ணு முணவுயா ருட்டஞ்செ ய்த, லயிர்ப்பிலா நண்பர் மாட்டு மமைதரக் குயயஞ் செய் தல், பயிர்ப்புமிக் குறநல் லோரைப் பழித்தல்பொய்க் கரியு ரைத்தல், செயிர்ப்பிலா லயத்தி டத்துஞ் சென்றுபட் டி மையி யற்றல்.

205. இவைமுதற் பலவு மாந்த ரியற்றிநாள் கழியா நிற்ப, ரவையெலாம் பொருணி மித்த யாகுமப் பொருளைப் பெற் ருற், குவையுறப் புதைத்து வைத்துக் குதுகுதுப் படைந்து காத்து, நவையுறு பணப்பே யென்னு நாமமும் பெறுவர் மாதோ.

206. ஒருசிறு தரும மேனு முஞற்றிடா ரிரப்போர் வந்து
தருநிகர் கரத்தா யென்று சாற்றினுங் கொள்ளா ராகிக்
கருணைசற் றின்றி யெல்லை கடந்திடத் துரந்து மீள்வர்
மருவுபல் கிளையு மோம்பார் வளம்படைத் தென்பெற் று
[ரால்.

207. முறைதவிர் கொடுங்கோன் மன்னர் முனிவிறகு நனியு மச்சங், கறைகெழு களவு செய்வார் காத்திற்கு மழுற்கு மச ச, மறைவறு தூய மாக்கள் வெளவுவ ரென்று மசச, மறை பொருள் பெற்று ரல்ல ரச்சமே பெற்றார் போலும்.

208. ஒல்லொழுக் கினரைத் தீய வொழுக்கரென் றுரைக்கச் செய்யும், புல்லொழுக் கினரைத் தூய புலத்தரென் றுரை க்கச் செய்யு, நல்லகற் புடைய மாதர் நலத்தையுஞ் சாமை செய்யும், பல்வகைத் துயருஞ் செய்யும் பாழ்ம்பொருள் பற்று ளார்க்கே.

209. கோடிபொன் னளிப்ப னின்றே கோடிரோர் மாத்தி ரைக்கு, ளோடிய கிளேக்கோர் வார்த்தை யுரைத்தடை குவ னென் றுலும், தேடிய கால தூதர் சிமிழ்த்தல்விட் டொழி வரேகொல், வாடிய மருங்கு னங்காய் மாண்பொருட் பயன் கண் டாயோ.

210. சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே.

211. பலகதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரேபோல, மல்லனீ ருலகிற் றோன்றி மறைந்திடு நம்மை விட்டுச், செல் வமென் றுழுவ தற்குஞ் செல்வமென் றுரைக்கும் பேர்நன், நல்லலே விளேப்ப தாகா தரும்பெறற் செல்வம் பாவாய்.

212. மதுமடை யுடைத்துப் பாயும் வனத்துழாய்க் கண்ணி வேய்ந்து, விதுமுகப் பதுமை செங்கை மெல்லென வருட ச் சேந்து, கதுமெனக் கருது மன்பர் கருத்தினுட் புகுந்து வாழு, முதுமறைப் பெருமான் பாதம் பெறுதலே மூரிச் செல்வம்.

213. கைப்பொருள் பெற்ற ஞான்றே கடவுளா லயத்திற் கீந்து
மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு வந்தும்
வைப்பென விரப்போர்க் கீந்தும் வருபவ ருளரேற் கூற்ற
மொய்ப்புயத் தண்டந் தப்பி முன்னவ னின்பத் தாழ்வார்.

214. முன்னமெத் தனேபேர் மைந்தர் முறைமைபா ராட்டி னரோ, வின்னமெத் தனேபேர் மைந்தர் முறைகொள விருக் கின் றரோ, வன்னமைந் தரைத்தம் மைந்த ரெனலறி யா மை யாகு, மென்னடைக் கரிய வாட்கண் விரைக்கருந் தா ழ்கு ழாலே.

215. மதலேயைப் பெறுநாட் டின்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலேநோ யடையிற் றுன்பம் விழுந்பரு வத்துந் துன்பங்
கதமுறக் காலர் வந்து கைப்பற்றிற் கணக்கி றுன்ப
மிதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மாளுல்.

216. இளமையி லியற்றுந் தண்ட மேற்றுமெவ்வெறுப்புய்த்தாலு
முளநடு நடுங்கிப் பின்னி யுற்றுறப் பற்றி நிற்பார்
தளர்வறு பருவஞ் சார்ந்தாற் றந்தைதாய் நடுங்கச் சீறி
யளமரு தம்ம னஞ்செ லவ்வாறே யொழுகி நிற்பர்.

217. சாருறு தந்தை யாருந் தாயரு மனந்தஞ் சன்ம
வூருமோ ரனந்தம் வாய்த்த வுறவுமோ ரனந்தம் பெற்ற
பேருமோ ரனந்தங் கன்மப் பெருக்கமு மனந்தங் கொண்ட
சீருமோ ரனந்த மின்னுஞ் சேர்வன வனந்த மாமால்.

218. அத்தகு மைந்த ரார்நீ யாரிஃது ரைக்கு நாளை
நித்தரை யிடைக்காப் பாற்றற் கியான்றிரு நெடுமாலல்லன்
கொத்துறு மைந்த ராசைக் கோட்பட்டு வருந்து கின்றாய்
பித்துளார் செய்கை யீது பெரியரிம் மயக்கம் பூணார்.

219. நல்வினை யடைந்த காலை நனிநலங் கிளைப்பர் நன்மை
யல்வினை யடைந்த காலை யல்லலிற் றுளைவ ரெல்லாந்
தொல்வினை வழிய வாகுந் தோன்றறு பவங்க டந்தம் [ல்.
புல்வினை யாலென் றெண்ணல் புலமையோ ரிடத்தின் றுமா

220. சளசள வெனவா யூற றடையின்றி யொழுகப் பற்போய்த்
தளர்வொடு மெலிந்து கூனித் தசையற வற்றி முற்றிக்
கிளர்நடை யொழிந்து பாயல் கிடைகொளுங் கிழவுத் தன்
யளவுகண் டிலர்கொ லுற்றவிளமையோர்க்ககங்களிப்பார்[மை

221. தரித்திர மென்று பல்காற் சாற்றினை யெதிர்ம றுத்தல்
பரித்திடு மச்சொ றன்மைப் பன்மைமுற் றுக வல்லோர்
விரித்துரை பொருணீ சற்றும் விளங்கிட வுணர்ந்தா யல்லை
யரித்தடங் கருங்கண் மாதே யாதனி னிலைத்த தன்றால்.

222. பாற்கட லடுத்த மீனப் பால்விரும் பாது மற்ற
வேற்குமா விரும்பி னுற்போ லெம்பிரான் றிருமுன் சார்ந்
நாறகதி கடக்கு மின்பச் செல்வத்தை நண்ணி டாமற் [து
சேற்கருங் கண்ணாய் துன்பச் செல்வமோ நண்ணு வேன்யா

223 மானமற் றிழிவு பூண்டு வளமனைக் கடைதோ றெய்தி [ன்.
யீனமுற் றிரந்தி ரந்திவ் வுடல்பருத் திடச்செய் தாலுந்
தூநகைக் கரிய வாட்கட் சுடர்த்தொடி கிலைப் பன்று
பேணமார் வெள்ள நீரிற் பிறந்திடுங் குமிழி போலும்.

224. நன்றியி லுடலைப் போற்ற லன்றுளார் செய்கை யன்று, வன்றிகண் மலத்த ழுந்தி மாசுக மென்றற் போல, வொன் றுமிக் குடும்பச் சேற்றி லுழன்றிடே னுழன்றி டேன்யா, னென்றுரைத் திறுத்தான் பற்றி லிருந்தவ ரேறு போல் வான். (௯௧)

(குசேலோபாக்கியானம்)

## குசேலரை வாயில் காப்போர் தடுத்தல்.

225. வருத்தபல் லுலகும் போற்ற மாற்றலர் கூற்றார் மே வச், செருத்தர சாளுங் கண்ணச செம்மலெங் கேளீ யெங் கே, யிருத்தபஞ் றுவாரக் கந்தை யேழைப்பார்ப் பானே சற்றும், பருத்தறிந் திடலற் றுய்கொல் பயனின்றுப் படை ந்தாய் போலும்.

226. மின்மைசெய் பகைஞர் யோனி மிதித்திடு கழற்காற் கண் ணன், றன்மையு மேழை யாநின் றன்மையுந் தெரிந்து நோ க்கில், வன்மைசெய புழைக்கை மாவு மசகமும் போலும் வாரிக், கொன்மைசெய் நீரு மாவின் குளப்படி நீரும் போ லும.

227. கனகமால் வரையு மண்ணுங் கட்டியும் போலுஞ் செ ங்கேழ்த், தினகர வொளியு மோர்கத் தியோதத்தி னொளியு ம் போலு, மனகமார் தருவும் புன்சீழ் கம்புலும் போலுஞ் சேடப், பணகமுஞ் சிறுநாங் கூழும் போலும்பாய் மிடிப் பார்ப் பானே.

228. பொருணணி யுளனென் றியாரும் புகலுமோர் வார்த்தை வேண்டு, மிருகையுங் கடகம் வேண்டு மிலங்குகுண் டலங் கள் வேண்டும, வருவிர லாழி வேண்டு மார்பிடை மதாணி வேண்டு, முருவமுத் தாரம் வேண்டு முயர்ந்தபட் டாடை வேண்டும்.

229. சிவிகைமுன் னூர்தி வேண்டுஞ் செழும்பொருட் செலவு வேண்டுங், குவிகையே வலரும் வேண்டுங் கோலமார்ந் திரு க்க வேணடுங், கவிகைதாங் குநரும் வேண்டுங் கையுறை சிறப்ப வேண்டு, மவிகையில் விளக்கம் வேண்டு மரசவை குறுகு வார்க்கே.

230. சிறப்புறச் செல்வ ராகிற் சிறப்புறு முகமன் செய்வர்
பெறப்படு மிடிய ராகிற் பிடர்பிடித் துந்து வார்கள்
வறப்பிலுன் முன்னு ணட்பை மறந்திடா திருக்கின் றுன்
சிறப்பநேற் றுண்ட கூற்றை யின்றியா மறப்ப மாகில்.[கொ

231. ஆவுமா னியற்பார்ப் பீரு மாடமைத் தோளி னீரு
மேவுநோய்க் கோட்பட் டீரு மிளிர்பிதிர்க் கருமஞ் செய்யப்
பூவினன் மகப்பே றுள்ளும் புந்தியி னீரு மம்பு
தூவுமு னரணஞ் சேர்மி னென்பர்பின் றோன்ற வாயார்.

232. கோதறு கல்வி சானூர்க் குடியிருந் தறியா னேனு
மோதருஞ் செல்வ மிக்கோ னொருவனே சிறந்தோ னுவன்
காதலின் வேத முன்னுங் கலைகள்கற் றுணர்ந்தோ னேனுந்
தீதமை மிடிய னுயிற சிறந்திடான் வேந்த வைக்கே.

233. கலைபயி னுணட் பென்று கரைந்தனை யந்த நட்பிச்
சிலைவலாற் கிருக்கு மாயிற் சென்றபற் பலவாண் டிற்கு
ளுலைவரு முடங்க ரிட்டு யொன்றிரண் டனுப்ப லாமே
மலைவறு தூதுய்த் துன்னை வருகவென் றழைக்க லாமே.

234. அந்தநாட் டகுதிக் கேற்ப வாக்கினன் போலு நின்னட்
பிந்தநாட் டகுதி வானத் திறைவனு மனுகொ ளுதம்
முந்தைநா ணட்பை யெண்ணி முடுகிநீ செலக்கூ டாதா
லெந்தநா ளினும்பூ பாலர் யாவர்க்கு நட்ப ரல்லர்.

235. அல்லது மிருநட் பேயென் றற்றநோக் காது செல்வி
லொல்லையி னினக்குண் டாயிற் றுறுமவ மான மெய்யே
நல்லதன் மனையின் வாக்கு நறுநெயுண் டொளிர்வதேயென்
றெல்லடா சுடரை முத்த மிடிற்சுடா தமைவ துண்டோ.

236. பழியிலுன் குலத்தோர் செய்யப் படுந்தொழி னன்கி யற்றி
யிழிவற வுண்டு டுத்த லின்றிமிக் கெண்ணங் கொண்டு
வழிநடந் திளைத்தாய் மெய்யும் வாடினு யந்தோ வானிற்
கழிமதி வருக வென்றுட் கசிந்தழு மழவு போன்றாய்.

237. இத்தனை மன்னர் தம்முள் யாரைநீ யொப்பாய் கந்தை,
பொத்திய மேனி யோயெண் ணிரட்டியா யிரம்பொ னன்
னுர், மெத்திய மனத்த ராகி மேவுறப் பொலியுங் கண்ண,
வித்தகன் சேவை காண லெண்மையின் மேவுங் கொல்லோ

238. முடங்குகை காவலோர் பேதை மூரிவா ளணவுங் கோட்டி, னிடம்படு தேத்தி ருலுக் கிச்சைவைத் ததனைப் போலுங், தொடங்கிய சிராத்த வில்லந் தோறுஞ்சென் றிரத்த னீத்து, விடங்கொள்வாண் மன்னற் காண விருப்புவைத் தமைந்து மாதோ. (கஅ)

(குசேலோபாக்கியானம்.)

## குசேலரை வாயிலோர் அழைத்தல்

239. நின்னுடை வரவு ரைத்தே நிருபனுக் கப்போழ் துற்ற
பன்னருங் களிப்பையாரோ பகர்ந்திட வல்ல மைய
முன்னமங் கிருந்த வின்ப முழுவது மறந்து நின்று
ளன்னர்நெஞ் சுடையா நீரார நட்பினிற் சிறந்த துண்டோ.

240. தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று, நேயமிக் குடைய ஞறி நெஞ்சினு ளுவகை பூப்பப், போயழைத் திடுமி னின்னே போயழைத் திடுமி னின்னே, போயழைத் திடுமி னின்னே யெனவிரை பொருளிற் சொற்றான்.

241. இலக்கண மின்மை நோக்கி யிதற்குமேற் சொற்று னல்லன்
மலக்குறும் பறுத்து யர்ந்த மாதவத் தலைவ ரேறே
பலப்பல சொல்லி யென்னே பாணிந்தல கரும மன்று
நலக்கநீ விரைவி னெய்தா விடினவ னண்ணு மிங்ஙன்.

242. ஆதலி னெய்தி ராணுக் ககத்துமிக் குவகை யுய்ப்ப
வேதமின் முனிவ ரேறே யெழுந்தரு ளுகவென் றங்கைப்
போதகங் கூப்பி னூர்கள் பொருக்கென வெழுந்து செம்மை
வேதமுற் றுணர்ந்த வையனை விரைதர நடக்க லுற்றான். (ச)

(குசேலோபாக்கியானம்.)

## குசேலர் கண்ணபிரானைத்தரிசித்தல்.

243. வருந்துமோர் மிடியன் சேம வைப்பெதிர் கண்டாற் போலு, மருந்துண விழந்தோன் விண்ணோ ரமுதெதிர் கண்டாற் போலும், பரிந்துவெப் புழலு வோன்கற் பகமெதிர் கண்டாற் போலுஞ், சரிந்தபற் றினன்மெய் யாசான் றனையெதிர் கண்டாற் போலும்.

244. எண்ணனைக் கிலங்கு மார்ப மீத்தருள் பிரானை நீல,
வண்ணனைத் திகிரி சங்கம் வலமிட முறக்கொண் டானை,
மண்ணனைத் தும்பு ரக்கும் வாசுதே வனைம ணக்குங், கண்
ணனைத் துளவத்தாமக்கண்ணனைக் கண்ணிற்கண்டான்.(உ)

(குசேலோபாக்கியானம்.)

## கண்ணபிரான் நன்னட்பின் பெருமை கூறல்.

245. ஆயின்மறை முதற்கலைக ளனைத்துமுணர்ந் தறமறம்பாத்
தேயினிது நன்றிதுதீ தென்றுணர்த்து மவர்நட்பை
வீயினுந்தான் மறப்பர்களோ மேதையோர் மறப்பரே
ளுயினுங்கீழ்ப் பட்டவர்க ளவர்காணிந் நானிலத்தே.

246. நல்லார்சொல் விரும்புவது நல்லாரைக் காண்பதுவு
நல்லார்க்கொன் றுதவுவது நல்லாரைப் புகழ்வதுவு
நல்லார்நன் றென்றுரைப்ப நவிற்றியவிவ் வெலாமடங்க
நல்லார்நட் பென்றுமுற நன்றன்றே நான்மறையோய்.

247. பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா னுயிடினு
மென்னுள்ளா னுவனவ னிருந்தவர்த நட்பிலனேற்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லா னுயிடினு
மென்னில்லா னுவனவ னிருந்தவர்த நட்புளனேல்.

248. பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று, தூயோர்கண்
மொழிவராற் றூயோரும் புகழ்தூயோ, ராயோர்கள் பெறு
நட்பை யருந்தவத்தாற் பெறலன்றி, யேயோவெண் மையி
ற்கிடைப்பி னிகழ்வரோ விகழ்வில்லார்.

249. சமயம்வரி னிடித்துரைப்பார் தக்கவழிச் செலச்செய்வா, ரி
மையவர்த முலகுறவு மிருளுலகம் பகையுமா, யமையவறி
வுறுத்துவா ரந்தோ நூல் கற்றுணர்ந்த, கமையுடையார் ந
ட்பெவர்க்குக் காண்கிடைக்கு மரிதரிது.

250. கூடுதற்குக் கூடாத கூட்டத்துப் படுநட்பு
வீடுதற்குத் தக்கதாய் நாடோறு மெலிந்தொழியு
நீடுதற்குத் தக்கதுநன் னெறிநின்றோர் நட்பொன்றே
தேடுதற்கு கிடையாத திரவியமு மஃதாமால். (கூ)

(குசேலோபாக்கியானம்)

## கண்ணபிரான் அவல் உண்ணல்.

---

251. பந்தனை யகன்ற மேலோய் பற்பல நாட்குப் பின்பு
வந்தனை யெனக்கென் கொண்டு வந்தனை யதனை யின்னே
தந்தனை யாயி னன்று தருசுவைப் பக்க ணத்தென்
சிந்தனை நின்ற தென்றான் றெரிவரும் வஞ்சக் கள்வன்.

252. இனியசிற் றுணவே தேனு மின்றிநீ வருவாய் கொல்லோ
வினியநின் னுள்ள மின்றே யெண்ணியா னறிதல் வேண்டு
மினியநின் மனைவி வாளா வேகிவா வென்ப ளோமற்
றினியவெற் கன்றி யார்க்குக் கொண்டுவந் திருக்கின் றாயே.

253. திருந்தவிங் களித்தி யென்று செங்கர மலர்த்தி நீட்டப்
பொருந்தவின் பாலுண் பான்பாற் புளித்தகா டியைக்கொ
டுத்திட், டருந்திடென் றுரைத்தல் போலிவ் வவற்கொடை
யெனறு வாளா, விருந்தனன் குசேல மேலோ னிவனுள
மறிந்த கண்ணன்.

254. நடலைநீர்ந் தவன்மெய்ப் போர்த்த நாள்பல கண்ட கந்தைப்
படர்தலைச சுருக்கி வாங்கிப் பாங்குலைத் தினிதி னாய்ந்து
விடலருங் கற்பு வாய்ந்த மின்னனார் வணங்குந் தெய்வந்
திடமுற முடிந்து வைத்த சிறுபொதி கண்டு கொண்டான்.

255. மலிதரு மனையின் வந்த வண்பொதி யவிழ்த்து நோக்கி, வலி
தரு மவற்று ணன்று வாய்த்தது நமக்கிதென்னா, வொலித
ரு கழற்கா லைய னொருபிடி யவலைக் காதல், பொலிதர வெ
டுத்து வாயிற் போகட்டுக கொண்டான் மாதோ.

256. செறிதரு சுவைத்தீ தென்றுந் தேவர்க்கு மரிய தாகு
மறிதரு விருப்பி னில்லி னமைத்ததே பழைது மன்று
குறிதரு விலைப்பாற் சென்று கோடலிவ் வளத்த தோவென்
றுறியளை வாரி யுண்டோ னொருபிடி யவலின் றானே.

257. முன்னுமிவ் வவலொன் றேனு முனைமுறிந் ததுவு மின்
று, பன்னுமுட் டையுமின் றாகும் பட்டவங் கையும ணக்கு
ங், கொன்னும்வாய் செவிப்பி னம்ம குளமும்வேண் டுவதி
ன்றென்னா, வுன்னுபல் லுலகு முண்டோ னொருபிடி யவ
லின்றானே.

258. நாட்டுமிவ் வவல்வி ருப்ப நமக்குமிக் குள்ள தென்று, கேட்டுளா கொல்லோ முன்னுங் கிளந்திருப் பதுமன் றே யென், றேட்டுமென் மலர்ப்பூந் தொங்க லிமையவர்க் கமிர்த முன்னா, ளூட்டிய புகழின் மேலோ னொருபிடி யவறின் றானே.

259. அரியவன் பினிற்கொ டுத்த விழிந்ததா யினுஞ்சி றந்த
திரியுமன் பினிற்கொ டுத்த விழிந்ததே சிறந்த தேனும்
பெரியவர் புகழப் பட்ட பெருந்தவக் குசேல மேலோ
னுரியவன் பினையுங் கூட்டி யொருபிடி யவறின் றானே. (௬)

(குசேலோபாக்கியானம்)

---

## விசுவாமித்திரன் இராமபிரானை வேள்வித்துணையாகப் பெறுதல்.

---

260. வந்து முனியெய் துதலு மார்பினணி யாரம்
அந்தர தலத்திரவி யஞ்சவொளி விஞ்சக்
கந்தமலரிற் கடவு டன்வரவு காணும்
இந்திர னெனக்கடி தெழுந்தடி பணிந்தான்.

261. நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்து வணங்கவெளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும்.

262. என்னனைய முனிவரரு மிமையவரு மிடையூறொன் றுடைய ரானால், பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும பதும பீடத், தன்னகருங் கற்பகநாட் டணிநகரு மணிமாட யோத்தி யென்னும, பொன்னகரு மல்லாது புகலுண்டோ விகல்கடந்த புலவு வேலோய்.

263. உரைசெய்யு மளவினவன் முகநோக்கி யுள்ளத்தி னொருவ ராலும், கரைசெய்ய வரியதொரு பேருவகைக் கடல்பெருகக் கரங்கள் கூப்பி, அரைசெய்தி யிருந்தபய னெய்தினன்மற் றினிச்செய்வ தருளு கென்று, முரைசெய்து கடைத்தலையான் முன்மொழியப் பின்மொழியு முனிவ னங்கே.

264. தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக் கிடையூறு, த் தவஞ்செய் வோர்கள், வெருவரச்சென் றடைகாம வெ குளியென விருதரிடை விலக்கா வண்ணம், செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர் நால்வரினுங் கரிய செம்மல், ஒரு வனைத்தந் திடுதியென வுயிரிரக்குங் கொடுங்கூற்றி னுளை யச் சொன்னான்.

265. எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன் மரும த்தி னெறிவேல் பாய்ந்த, புண்ணிலாம் பெரும்புழையிற்க னலுழைந்தா லெனச்செவியிற் புகுத லோடும், உண்ணிலா வியதுய்ரம் பிடித்துந்த வாருயிர்நின் றூச லாட, கண்ணி லான் பெற்றிழந்தா னெனவுழந்தான் கடுந்துயரங் கால வேலான்.

266. தொடையூற்றுந் தேன்றுளிக்கு நறுந்தாரா னொருவண் ணந் துயரநீங்கிப், படையூற்ற மிலன்சிறிய னிவன்பெரியோ ய்பணியிதுவேற் பனிநீர்க் கங்கை, புடையூற்றுஞ் சடையா னு நான்முகனும் புரந்தரனும் புகுந்து செய்யும், இடையூ ற்றுக் கிடையூறு யான்காப்பென் பெருவேள்விக் கெழுக வென்றான்.

267. என்றனனென் றலுமுனிவோ னெழுந்தனன்மண் ப டைத்தமுனி யிறுதிக் காலம், அன்றெனவா மெனவிமை யோ ரயிர்த்தனர்மேல் வெயில்கரந்த தங்கு மிங்கும், நின் றனவுந் திரிந்தனமீ னிவந்தகொழுங் கடைப்புருவ நெற்றிமுற் றச், சென்றனவந் தனநகையுஞ் சிவந்தனகண் ணிருண்ட னபோய்த் திசைக ளெல்லாம்.

வேறு.

268. கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி யென்றவற் புகன்று நின்மகற்
குறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தி யோவெனு வசிட்டன் கூறினன்.

269. பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் கனைவில் விஞ்சைவந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே.

270. குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ற லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான்.

271. வந்த நம்பியைத் தம்பி தன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநற்
றந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தன னியைந்த செய்கென்றான். (மஉ)

(கம்பராமாயணம்.)

---

## தசரதன் அமைச்சரது அமைதி.

---

272. உற்றது கொண்டு மேல்வந் துறுபொரு ளுணருங்கோளார்
மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர் பிறப்பின் மேன்மைப் பெரியவ ரரிய நூலுங்
கற்றவர் மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்.

273. காலமு மிடனு மேற்ற கருவியுந் தெரியக் கற்ற
நூலுற நோக்கித் தெய்வ நுனித்தறங் குணித்த மேலோர்
சீலமும் புகழ்க்கு வேண்டுஞ் செய்கையுந்தெரிந்துகொண்டு
பால்வரு முறுதியாவுந் தலைவற்குப் பயக்கும் நீரார்.

274. தம்முயிர்க் குறுதியெண்ணா தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்
செம்மையிற் றிறம்பல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்காலம்
மும்மையு முணர வல்லா ரொருமையே மொழியு நீரார்.

வேறு.

275. குலமுதற் றொன்மையுங் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் பயனு மெய்தினார்
நலமுத னலியினும் நடுவு நோக்குவார்
சலமுத லறுத்தருந் தருமந் தாங்கினார்

276. நல்லவுந் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவ னியல்பி னெண்ணுவார்
ஒல்லைவந் துறுவன வுற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென வுதவுஞ் சூழ்ச்சியார்.

277. அறுபதி னாயிர ரெனினு மாண்டகைக்
குறிநிபி லொன்றிவற் குணர்வென் றுன்னலாம்
பெறலருஞ் சூழ்ச்சியர் திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென வந்து சுற்றினர். ([illegible])

(கம்பராமாயணம்).

---

## தசரதன் அமைச்சரோடு ஆலோசித்தல்.

---

278. அன்னவ ரருளமைந் திருந்த வாண்டையின்
மன்னனு மவர்முகம் மரபி னோக்கினான்
உன்னிய தரும்பெற லுறுதி யொன்றுள
தென்னுணர் வனையந் நினைது கேட்கென்ற.

279. வெய்யவன் குலமுதல் வேந்தர் மேலவர்
செய்கையி னொருமுறை திறம்ப லின்றியே
வையம்யா னாண்டவாண் டுங்கண் மாட்சியால்
ஐயமி லறுபதி னாயி ரம்மரோ.

280. வெள்ளநீ ருலகினில் விண்ணி னாகில்
தள்ளரும் பகையெலாந் தவிர்த்து நின்றயான்
கள்ளரிற் கரந்துறை காம மாதியா
உள்ளுறை பகைஞருக் கொதுங்கி வாழ்வெனோ.

281. ஒட்டிய பகைஞர்வந் துருத்த போரிடைப்
பட்டவ ரல்லரேற் பரம ஞானமேபோய்த்
தொட்டவ ரல்லரேற் செல்வ மண்டெனா
விட்டவ ரல்லரேல் யாவர் வீடுளார்.

282. இறப்பெனு மெய்ம்மையை யிம்மை யாவர்க்கு
மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ.

283. அருஞ்சிறப் பமைவரு துறவு மவ்வழி
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவு மாய்வரும்
பெருஞ்சிறை குளவெனிற் பிறவி யென்னுமிவ்
விருஞ்சிறை கடத்தலி னினிய தியாவதே.

284. உம்மையா னுடைமையி னுலகம யாவையுஞ்
செம்மையி னோம்பிநல் லறமுஞ் செய்தனென்
இம்மையி னுதவிநல் லிசைந டாயநீர்
அம்மையு முதவுதற் கமைய வேண்டுமால்.

285. கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங் கவிகையும் பெய்யு மின்னிழ
னிச்சய மன்றெனி னொடித்து நாளுண்ட
வெச்சிலை நுகருவ தின்ப மாகுமோ.

286. மைந்தரை யின்மையில் வரம்பில் காலமும்
நொந்தன னிராமனென் னோவை நீக்குவான்
வந்தன னினியவன் வருந்த யான்பிழைத்
துய்ந்தனன் போவதோ ருறுதி யெண்ணினேன்.

287. இறந்திலன் செருக்களத் திராமன் றாதைதான்
அறந்தலை நிரம்பமூப் படைந்த பின்னருந்
துறந்திலனென்பதோர் சொல்லுண் டானபின்
பிறந்திலனென்பதிற் பிறிதுண் டாகுமோ.

288. பெருமக னென்வயிற் பிறக்கச் சீதையாந்
திருமகண் மணவினை தெரியக் கண்டயான்
அருமக னிறைகுணத் தவனி மாதெனும்
ஒருமகண் மணமுங்கண் டுவப்ப தாயினேன்.

289. நிவப்புறு நிலனெனு நிரம்பு நங்கையுஞ்
சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்
உவப்புறு கணவனை யுயிரி னெய்திய
தவப்பயன் றாழ்ப்பது தரும மன்றரோ.

290. ஆதலா லிராமனுக் கரசை நல்கியிப்
பேதமைத் தாய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணுவேற்
கியாதுநுங் கருத்தென வினைய கூறினான்.

வேறு.

291. திரண்ட தோளின னிப்படிச் செப்பலுஞ் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய வுவகைய ராங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்
இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென விருந்தார்.

292. அன்ன ராயினு மரச னுக் கதுவல துறுதி
பின்ன ரில்லெனக் கருதியும் பெருநில வரைப்பின்
மன்னு மன்னுயிர்க் கிராமனின் மன்னவ ரில்லை
என்ன வுன்னியும் விதியது வலியினு மிசைந்தார்.

293. இருந்த மந்திரக் கிழவரோ டெண்ணமுந் தன்பால்
பரிந்த சிந்தையு மன்னவன் கருதிய பயனும்
பொருந்து மன்னுயிர்க் குறுதியும் பொதுவுற நோக்கித்
தெரிந்து நான்மறைத் திசைமுகன் றிருமகன் செப்பும்.

294. நிருப நின்குல மன்னவர் நேமிபண் டுருட்டிப்
பெருமை யெய்தினர் யாவரே யிராமனைப் பெற்றார்
கரும மேயிது கற்றுணர்ந் தோர்க்கினிக் கடவ
தரும மும்மிது தக்கதே நினைத்தனை தகவோய்.

295. புண்ணி யந்தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த
அண்ண லேயினி யருந்தவ மியற்றவு மடுக்கும்
வண்ண மேகலை நிலமகண் மற்றினைப் பிரிந்து
கண்ணி முந்நிலை ளௌனச்செயு நீதந்த கழலோன். (கஅ)

(கம்பராமாயணம்)

## மந்தரை கைகேசியைக் கலைத்தல்

296. தோன்றிய கூனியுந் துடிக்கு நெஞ்சினள்
ஊன்றிய வெகுளியா லுளைக்கு முள்ளத்தாள்
கான்றெரி நயனத்தாள் கதிக்குஞ் சொல்லினள்
மூன்றுல கினுக்குமோ ரிடுக்கண் மூட்டுவாள்.

297. தொண்டைவாய்க் கேகயன் றோகை கோயின்மேல்
மண்டினள் வெகுளியின் மடித்த வாயினள்
பண்டைநா ளிராகவன் பாணி வில்லுமிழ்
உண்டையுண் டதனைத்தன் னுள்ளத் துள்ளுவாள்.

298. நாற்கடற் படுமணி நளினம் பூத்ததோர்
பாற்கடற் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் கண்ணளி பொழியப் பொங்கணை
மேற்கிடந் தாளை விரைவி னெய்தினாள்.

299. எய்தியக் கேகயன் மடந்தை யேடவிழ்
நொய்தலர் தாமரை நோற்ற நோன்பினாற்
செய்தபே றுவமைசால் செம்பொற் சீறடி
கைகளிற் றீண்டினாள் காலக் கோளனாள்.

300. தீண்டலு முணர்ந்தவத் தெய்வக் கற்பினாள்
நீண்டகண் ணனந்தரு நீங்கு கிற்றிலண்
ஈண்டெழு பெரும்பழி முடிக்கும் வெவ்வினை
தூண்டிடக் கட்டுரை சொல்லன் மேயினாள்.

301. அணங்குவாள் விடவரா வணுகு மெல்லையுங்
குணங்கெடா தொளிவிரி குளிர்வெண் டிங்கள்போல்
பிணங்குவான் பேரிடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவா யல்லைநீ யுறங்கு வாயென்றாள்.

302. வெவ்விட மனையவள் விளம்ப வேற்கணாள்
தெவ்வடு சிலைக்கையென் சிறுவர் செவ்வியர்
அவ்வவர் துறைதொறு மறந்தி றம்பலர்
எவ்விட ரெனக்குவந் தடுப்ப தீண்டென்றாள்.

303. பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்
உராவருந் துயரைவிட் டுறுதி காண்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேத மேயன
இராமனைப் பயந்தவெற் கிடருண் டோவென்றாள்.

304. ஆழ்ந்தபே ரன்பினா ளனைய கூறலுஞ்
சூழ்ந்ததீ வினைநிகர் கூனி சொல்லுவாள்
வீழ்ந்தது நின்னலந் திருவும் வீந்தது
வாழ்ந்தனள் கோசலை மதியி னாலென்றாள்.

305. அன்னவ ளவ்வுரை யுரைப்ப வாயிழை
மன்னவர் மன்னனேற் கணவன் மைந்தனேல்
பன்னரும் பெரும்புகழ்ப் பரதன் பார்தனில்
என்னிதன் மேலவட் கெய்தும வாழ்வென்றாள்.

306. ஆடவர் நகையுற வாண்மை மாசுறத்
தாடகை யெனும்பெயர்த் தையலாள் பட
கோடிய வரிசிலை யிராமன் கோமுடி
சூடுவ னாளைவாழ் விதெனச் சொல்லினாள்.

315. கல்வியு மிளமையுங் கணக்கி லாற்றலும்
வில்வினை யுரிமையு மழகும் வீரமும்
எல்லையில் குணங்களும் பரதற் கேயது
புல்லிடை யுகுத்தமு தேயும் போலென்றாள்.

வேறு.

316. வாய்க யப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்
காய்க ணற்றலை நெய்சொரிந் தெனக்கதங் கனற்றக்
கேகை யர்க்கிறை திருமகள் கிளரிள வரிகள்
தோய்க யற்கண்கள் சிவப்புற நோக்கினள் சொல்லும்.

317. எனக்கு நல்லையு மல்லைநீ யென்மகன் பரதன்
தனக்கு நல்லையு மல்லையத் தருமமே நோக்கில்
உனக்கு நல்லையு மல்லைவந் தூழ்வினை தூண்ட
மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய்.

318. பிறந்தி றந்துபோய்ப் பெறுவது மிழப்பதும் புகழேல்
நிறந்தி றம்பினு நியாயமே திறம்பினு நெறியின்
திறந்தி றம்பினுஞ் செய்தவந் திறம்பினுஞ் செயிர்தீர்
மறந்தி றம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ.

319. போதி யென்னெதிர் நின்றுநின் புன்பொறி நாவைச்
சேதி யாதிது பொறுத்தனன் புறஞ்சில ரறியின்
நீதி யலலவு நெறிமுறை யல்லவு நினைந்தாய்
ஆதி யாதலி னறிவிலி யடங்குதி யென்றாள்.

320. அஞ்சி மந்தரை யகன்றில ளம்மொழி கேட்டும்
நஞ்சு தீர்க்கினுந் தீர்கிலா ததுநவி லென்னத்
தஞ்ச மேயுனக் குறுபொரு ளுணர்த்துகை தவிரேன்
வஞ்சி போலியென நாடிமீண் டிசைவீரந் துரை வழங்கும்.

321. மூத்த வற்குரித் தரசெனு முறைமையி னுலகங்
காத்த மன்னனி னிளையனன் றேகடல் வண்ணன்
ஏத்து நீண்முடி புனைவதற் கிசைந்தன னென்றால்
மீத்த ருஞ்செல்வம் பரதனை விலக்குமா றெவனோ.

322. அறனி ரம்பிய வருளுடை யருந்தவர்க் கேனும்
பெறல ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்
மறனி னைந்துமை வலியில ராயினு மனத்தால்
இறலு றும்படி யியற்றுவ ரிடையறு வின்னல்.

323. தூண்டு மின்னலும் வறுமையுந் தொடாதரத் துயரால்
ஈண்டு வந்தனை யிரந்தவர்க் கிருநிதி யவளே
வேண்டி யீதியோ வெள்குதி யோவிம்ம னோயான்
மாண்டு போதியோ மறுத்தியோ வெங்ஙனம் வாழ்தி.

324. சிந்தை செய்கையிற் றிகைத்தனை பின்னிச்சில நாளில்
தந்த மின்மையு மெளிமையு நிற்கொண்டு தவிர்க்க
உந்தை யுன்னையுன் கிளைஞரமற் றுன்குலத் துள்ளோர்
வந்து காண்பதுன் மாற்றவள் செல்வமோ மதியாய்.

325. காத லுன்பெரும் கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் றந்தையைத் தெறுகில னிராமன்
யாது லன்னவ னுந்தைக்கு வாழ்வினி யுண்டோ
பேதை யுன்றுணை யாருளர் பழிபடப் பிறந்தார்.

326. கெடுத்தொ ழிந்தனை யுனக்கரும் புதல்வனைக் கிளர்நீர்
உடுத்த பாரக முடையவ னொருமகற் கெனவே
கொடுத்த பேரர சவன்குலக் கோமைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்கு மாம்பிறர்க் காகுமோ வென்றாள்.

327. ஆய மந்தரை யிவ்வுரை செப்பலுந் தேவி
தூய சிந்தையுந் திரிந்தது சூழ்ச்சியி னிமையோர்
மாயை யுமவர் பெற்றநல் வரவுண்மை யாலும்
ஆய வந்தண ரியற்றிய வருந்தவத் தாலும்.

328. அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமும்
துரக்க நல்லரு டுறந்தன டூய்மொழி மடமான்
இரக்க மின்மையன் றோவின்றில் வுலகங்க ளிராமன்
பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் றதுவே.

329. அனைய தன்மைய ளாகிய கைகய னன்னம்
வினைநி ரம்பிய கூனியை விரும்பினள் நோக்கி
எனையு வந்தனை யினியையென் மகனுக்கு மனையாள்
புனையு நீண்முடி பெறும்படி புகலுதி யென்றாள்.

330. மாழை யுண்கணி யுரைசெயக் கேட்டமந் தரையென்
தோழி வல்லளென் றுணைவல்ல ளென்றடி தொழுதாள்
தாழு மன்னிலை யென்னுரை தலைநிற்பி னுலகம்
ஏழு மேழுமுன் னொருமகற் காக்குவெ னென்றாள். (௩௫)

(கம்பராமாயணம்)

## பரதன் குகனைச் சந்தித்தல்.

331. கங்கையிரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற் குயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான் விற்பிடித்த வேலையினான்
கொங்கலரு நறுந்தண்டார்க் குகனென்னுங் குறியுடையான்.

332. கற்காணுந் திண்மையான் கரைகாணாக் காதலான்
அற்காணிற் கண்டனைய வழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோண் மழைகாணு மணிநிறத்தாய்
நிற்காணு முள்ளத்தா னெறியெதிர்நின் றனனென்றான்.

333. தன்முன்னே யவன்றனைத் தன்றுணைவன் முன்னுரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்
மன்முன்னே தழீஇக்கொண்ட மனக்கினிய துணைவனேல்
என்முன்னே யவற்காண்பன் யானேசென் றெனவெழுந்தான்

334. என்றெழுந்த தம்பியொடு மெழுகின்ற காதலொடுங்
குன்றெழுந்து சென்றதெனக் குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினான் றிருமேனி நிலையுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி யெயினர்கோன் றுண்ணென்றான்.

335. வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானை
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்.

336. நம்பியுமென் னாயகனை யொக்கின்றா னயலினின்றான்
தம்பியையு மொக்கின்றான் றவவேடந் தலைநின்றான்
துன்பமொரு முடிவில்லை திசைநோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தா ரிழைப்பரோ பிழைப்பென்றான்.

337. உண்டிடுக்க ணொன்றுடையா னுலையாத வன்புடையான்
கொண்டதவ வேடமே கொண்டிருந்தான் குறிப்பெல்லாங்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன் காமின்க ணெறியென்னாத்
தண்டுறையோர் நாவாயி லொருதனியே தான்வந்தான்.

338. வந்தெதிரே தொழுதானை வணங்கினான் மலரிருந்த
அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
தந்தையினுங் களிகூரத் தழுவினான் றகவுடையோர்
சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

வேறு.

339. தழுவின புளினர் வேந்தன் றாமரைச் செங்க ணானை
எழுவினு முயர்ந்த தோளா யெய்திய தென்னை யென்ன
முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி னின்றும்
வழுவின னதனை நீக்க மன்னனைக் கொணர்வா னென்றான்.

340. கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு முயிர
னாகி, மீட்டுமண் ணதனில வீழ்ந்தான் விம்மின னுவகை
வீங்கத், நீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் பூவிற்,
பூட்டிய கையன பொய்யி லுள்ளத்தன் புகல லுற்றான.

341. தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிர மிராமர் நின்கே ளாவரோ தெரியி லம்மா.

342. என்புகழ் கின்ற தேழை யெயினனே னிரவி யென்பான்
றன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிற்கு மாபோன்
மன்புகழ் பெருமை நுங்கண் மரபினோர் புகழ்க ளெல்லாம்
உன்புக ழாக்கிக் கொண்டா யுயர்குணத் தூரவுத் தோளாய்

343. எனையிவை யன்ன மாற்ற மினையவன பலவுங் கூறிப்
புனைகழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன பொருவில்காதல்
அனையவற் கமைவிற் செய்தா னரவற் கன்பி லாதார்
நினைவருங் குணங்கொ டன்றோ விராமன்மே னிமிர்ந்தகாதல்

344. அவ்வழி யவனை நோக்கி யருட்ரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ண றென்றிசைச் செங்கை கூப்பி
எவ்வழி யுறைந்தா னம்மு னென்றலு மெயினர் வேந்தன்
இவ்வழி வீர யானே காட்டுவ லெழுக வென்றான.

345. காரெனக் கடிது சென்றான் கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான் பருவரற் பரவைபுக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டுங் கண்ணான்

346. இயன்றதென் பொருட்டி னிவ் விடருனக் கென்ற போழ்து, மயின்றனை கிழங்குங் காயு மமிர்தென வரிய புல்லிற், றுயின்றனை யெனவு மாவி துறந்திலென் சுடருங் காசு, குயின்றுயர் மகுடஞ் சூடுஞ் செல்வமுங் கொள்வன் யானே.

347. தூண்டர நிவந்த தோளான் பின்னருஞ் சொல்லு வானந், நீண்டவன் றுயின்ற சூழ லிதுவெனி னிமிர்ந்த நேயம், பூண்டவன் றொடர்ந்து பின்னே போந்தவன் பொழுது நீத்த, தியாண்டென வினிது கேட்டா னெயினர்கோ னிதனைச் சொன்னான்.

348. அல்லையாண் டமைந்த மேனி யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய் கண்கணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்றா னிமைப்பில னயன மென்றான்

349. என்பதைக் கேட்ட மைந்த னிராமனுக் கிளையா ரென்று
முன்பொத்த தோற்றத் தேமில யானென்று முடிவி லாத
துன்பத்துக் கேது வானே னவனது துடைக்க நின்றான்
அன்பதுக் கெல்லை யுண்டே யழகிதென் னடிமை யென்றான்

350. அவ்விடை யண்ணறானு மன்றரும் பொடியின் வைகித்
தெவ்விடை தரநின் றார்கருஞ் செறிகழற் புளிஞர் கோமான்
இவ்விடைக் கங்கை யாற்றி னேற்றினை யாயி னைமமை [றான்
வெவ்விடர்க் கடலி னேற்றி வேந்தன்பால் விடுத்த தென்

வேறு.

351. சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோசலையைத் தொழுது நோக்கி, வெற்றித்தார்க் குரிசிலிவ ராரென்று குகன்வினவ வேந்தர் வைகு, முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகு மீன்றானை முன்னீன் றானைப், பெற்றத்தாற் பெறுஞ் செல்வம் யான்பிறந்த லாற்றுறந்த பெரியா ளென்றான்.

352. என்றலுமே யடியின்மிசை நெடிதுவீழ்ந் தழுவானை
யிவன்யா ரென்று, கன்றுபிரி காராவின் றுயருடைய கொ
டியினவக் கழற்கான் மைந்தன், இன்றுணைவ னிராகவனுக்
கிலக்குவற்கு மிளையவற்கு மெனக்கு மூத்தான், குன்றனைய
திருநெடுந்தோட் குகனென்பா னிந்நின்ற குரிசி லென்றான்.

353. நைவீர லீர்மைந்தீ ரினித்துயரா லுடிறந்து காடு நோ
க்கி, மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற் றுமன்றே விலங்கற்
றிண்டோள், கைவீரக் களிறனைய காளையிவன் றனோடுங்
கலந்து நீர்கள், ஐவீரு மொருவீரா யகலிடத்தை நெடுங்கால
மளித்தி ரென்றாள்.

354. அறந்தானே யென்கின்ற வயனின்று டனைநோக்கி
யைய வன்பி, னிறந்தானை யுரையென்ன நெறிதிறம்பாத்
தன்மெய்யைத் திறப்ப தாக்கி, இறந்தான்ற னிளந்தேவி யாவ
ர்க்குந் தொழுகுலமா மிராமன் பினபு, பிறந்தானு முளனெ
ன்னைப் பிரியாதா னனைப்பயந்த பெரியா ளென்றான.

355. நடுமையா னத்திடைதன் றுணைபோகத் தோன்றறுய
ர்க்கடலி னேகக், கடுமையார் கானகத்துக் கருணையார் கவி
யேகக் கழற்கான் மாய, நெடுமையா லன்றளந்த வுலகெ
ல்லாந் தன்மனத்தே நினைந்து செய்யுங், கொடுமையா லள
ந்தாளோ யாரிவரென் றுரையென்னக் குரிசில் கூறும்.

356. படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ் செவிலி
யைத்தன பாழ்த்த பாவிக், குடரிலே நெடுங்காலங் கிடந்
தேற்ற முயிர்ப்பாரங் குறைந்து தேய, உடரெலா முயி
ரிலா வெனத்தோன்று முலகத்தே யொருதகி யன்றே, இட
ரிலா முகத்தாளை யறிந்திலையே லிந்நின்றா ளெனனை யீன்
றாள்.

வேறு.

357. என்னக் கேட்டவ் விரக்க மிலாளையுந்
தன்னற் கையின் வணங்கினன் றுயெனா
அன்னப்பேடை சிறையில தாய்க்கரை
துன்னிற் றென்னவும் வந்தது தோணியே.

## இராமபிரான் சடாயுவைக் காண்டல்.

358. உலகொரு மூன்றுந்த முடைமை யாக்குறும்
அலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்
மலர்மகட் குவமையா ளோடும் வந்தவிச்
சிலைவலி வீரரைத் தெரிகி லேனென்று.

359. கருமலை செம்மலை யனைய காட்சியர்
திருமகிழ் மார்பினர் செங்கண் வீரர்தாம
அருமைசெய் குணத்தினென் றனைவ னூழியான்
ஒருவனை யிருவரு மொத்து ளாரரோ.

360. எனப்பல நினைப்பின மனத்து ளெண்ணுவான்
சினப்படை வீரர்மேற் செலவு மன்பினன்
கனப்படை வரிசிலைக் காளை நீர்கள்யார்
மனப்பட வெனக்குரை வழங்கு வீரென்றான்.

361. வினவிய காலையின் மெய்ம்மை யல்லது
புனைமலர்த் தாரவர் புகல்கி லாமையாற்
கனைகட னெடுநில காவ லாழியான்
வனைகழற் றயரதன் மைந்தர் யாமென்றார்.

362. உரைத்தலும் பொங்கிய வுவகை வேலையான்
தரைத்தலை யிழிந்தவர்த் தழுவுங் காதலன்
விரைத்தடந் தாரினீர் வேந்தர் வேந்தன்றன்
வரைத்தடந் தோளிணை வலிய வோவென்றான்.

363. மறக்கமுற் றுகனை வாய்மை காத்தவன்
துறக்கமுற் றனென முன்னர்ச் சொல்லலும
இறக்கமுற் றனென வேக்க மெய்தினான்
உறக்கமுற் றனென வுணர்வு நீங்கினான்.

364. தழுவின ரெடுத்தனர் தடக்கை யான்முகங்
கழுவின ரிருவருங் கண்ணி னீரினால்
வழுவிய வென்னுயிர் வந்த மன்னனும்
அழிவுறு நெஞ்சின ரரற்றி னரோ.

வேறு.

365. பரவலருங் கொடைக்குநின்றன் பனிக்குடைக்கும் பொறைக்குநெடும் பண்பு தோற்ற, கரவலருங் கற்பகமு முடுபதியுங் கடலிடமுங் களித்துவாழப், புரவலர்தம் புரவலனே பொய்ப்பகையே மெய்க்கணியே புகழினை வாழ்வே, இரவலரு நல்லறமும் யானுமினி யென்படநீத் தேகினாயோ.

366. அலங்கார மெனவுலகுக கழுதளிக்குந் தனிக்குடையா யாழிசூழ்நத, நிலங்காவ லதுகிடக்க நிலையாத நிலையுடையே யேன்யநெஞ்சின், நலங்காண நடந்தனையோ நாயகனே நீவினையே னண்பினினறும், விலங்கானே னாதனினால் விலங்கினே னின்னுமுயிர் விட்டிலேனால்.

367. நயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி சம்பரனைத் தடிந்த வநநாள், அயிர்கிடக்குங் கடல்வலயத் தயலறிய நீயுடனா னாவியென்று, செயிர்கிடத்தல் செய்யாத திருமனைத் தாய் செப்பினாய் திறம்பா னின்சொல், உயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினா ருணர்விழந்த கூற்றினாரே.

368. அருணன்றனை புதல்வனியா னவன்படரு முலகெல்லாம் படர்வேனாழி, இருண்மொய்பு கெடத்துரந்த தயரதற்கின் னுயிர்த்துணைவ னிமையோ ரோடும், வருணங்கள் வகுத்திட்ட காலநதே வநதுதிதகேன் நமுகின் மன்னன், தருணங்கொள் பேரொளியீர் சயபாதி யின்வருச டாயுவென்றான.

369. ஆண்டவனீ துரைசெய்ய வஞ்சலித்த மலர்க்கையா ரன்பி ரோடு, மூண்டபெருந் துன்பததான் முறைமுறையி னிறைமலர்க்கண் ணொய்த்த நீரார், பூண்டபெரும புகழ் நிறுவித தமபொருட்டான் மேலுலகய புகக தாதை, மீண்டனன்வந் தானவனைக் கண்டனரே யொத்தனரவ் விலங்கற் றோளார்.

370. மருவினிய குணத்தவரை யிருசிறகா லுரத்தழுவி மக்காணீரே, உரியகடன் வினையேற்கு முதவுவீ ருடலிரண்டுக் குயிரொன் றானான், பிரியவுந்தான் பிரியாதே யினிதிருக்கு முடற்பொறையாம் பீழை பாரா, தெரியதனி யின்றேபுக் கிடவேனே யித்துயர மறவே னென்றான்.

வேறு.

371. என்று ரைத்த வெருவை யரசனை
துன்று தாரவர் நோக்கித் தொழுதுகண்
ஊன்று மூத்த முறையுறை யாயுக
நின்று மற்றின்ன நீர்மை நிகழ்த்தினார்.

372. உய்வி டத்துத வற்குரி யானுந்தன்
மெய்வி டக்கரு தாதுவிண் ணேறினான்
இவ்வி டத்தினி லெமபெரு மானுனை
கய்வி டிற்பினை யார்களை கண்ணுளார்.

373. தாயி னீங்கருந் தந்தையிற் றண்ணகர்
வாயி னீங்கி வனம்புகுந் தெய்திய
நோயி னீங்கினை முன்னிலெ னெங்களை
நீயு நீங்குதி யோநெறி நீங்கலாய்.

374. என்ற சொல்ல ரிரங்கழி நெஞ்சினர்
நின்ற வீரரை நோக்கி நினைந்தவன்
அன்ற தென்னில் லயோத்தியி னய்யன்மீர்
சென்ற பின்னவர்ச் சேர்குவென யானென்றான். (கஎ)

(கம்பராமாயணம்)

## அங்கதன் தூது செல்லுதல்.

375. நன்றென வவன்ற னைக்கூய நயமிகு நண்ண லார்பால்
சென்றிரண் டுரையி லொன்றைச் செப்பினை தெரிதியென்றான்
அன்றவ னருளப் பெற்ற வாண்டகை யலங்கற் பொற்றோள்
குன்றினு முயர்ந்த தென்றான் மனநிலை கூற லாமோ.

376. என்னவற் குரைப்ப தென்ன வேந்திழை யாளை விட்
டுத், தன்னுயிர் பெறுத லன்றோ வன்றெனிற் றலைகள் பத்
துஞ், சின்னபின் னங்கள் செய்ய செருக்களஞ் சேர்த ல
ன்றோ, சொன்னவை யிரண்டி லொன்றைத் துணியெனச்
சொல்லி டென்றான்.

377. அறத்துறை யன்று வீரர்க் கடுக்குமன் றாண்மை யன்று
மறத்துறை யன்று சேம மறைந்துறைந் தொதுங்கி வாழ்தல்
நிறத்துற வாளி கோத்து நேர்வந்து நிற்கு மாகின்
புறத்துற வெதிரே வந்து போர்தரப் புகறி யென்றான்.

378. பார்மிசை வணங்கிச் சீயம் விண்மிசைப் படர்வ தேபோல்
வீரன்வெஞ் சிலையிற் கோத்த வம்பென விரைவிற் போனன்
மாருதி யல்ல னுகி னீயெனு மாற்றம் பெற்றேன்
ஆரினி யென்னே டொப்பா ரென்பதோ ரின்ப முற்றுன்.

379. அழுகின்ற கண்ண ராகி யநுமன்கொ லென்ன வஞ்சித்
தொழுகின்ற சுற்றஞ் சுற்றச் சொல்லிய துறைக டோறும்
மொழிகின்றவீரர் வார்த்தைமுகந்தொறுஞ் செவியின்மூழ்க
எழுகின்ற சேனை நோக்கி வியந்திருந் தானைக் கண்டான்.

380. இன்றிவன் றன்னை யெய்த நோக்கினேற் கெதிர்ந்த போரில்
வென்றவன் றுதை மார்பின் விலவின்மேற்கணையொன்றேவி
கொன்றவன் றுனே வந்தா னென்றுடன் குறுகி னல்லால்[க்
|ஒன்றிவன் றன்னைச் செயய வல்லரோ வுயிர்க்கு நல்லார்.

381. நெடுந்தகை விடுத்த தூத னிவையிவை நிரம்பவெண்ணிக்
கடுங்கனல விடமுங் கூற்றுங் கலந்துகால் கரமுங் காட்டி
விடுஞ்சுடர் மகுட மின்ன விரிகட லிருந்த தன்ன [றுன்.
கொடுந்தொழின் மடங்க லன்ன னெதிர்சென்று குறுகினின்

382. நின்றவன் றன்னை யன்ன னெருப்பெழ நிமிரப் பார்த்திங்
கின்றிவண் வந்த நீயா ரெய்திய கரும மென்னை
கொன்றிவர் தின்னு முன்னங் கூறுதி தெரிய வென்றுன்
வன்திறல் வாலி சேயும் வாளெயி றிலங்க நக்கான்.

383. பூதநா யகனீர் சூழ்ந்த புவிக்குநா யகனைப் பூமேல்
சீதைநா யகன்வே றுள்ள தெய்வநா யகனீ செப்பும்
வேதநா யகன்மே னின்ற விதிக்குநா யகன்றுன் விட்ட
தூதன்யான் பணித்த மாற்றஞ் சொல்லியவந்தேனென்றுன்

384. அரன்கொலா மரிகொ லாமற் றயன்கொலா மென்பா ரன்றிக்
குரங்கெலாங் கூட்டி வேலைக் குட்டத்தைச் சேது கட்டி
இரங்குவா னுகி னின்னு மறிதியென் றுன்னை யேவும்
நரன்கொலா முலக நாத னென்றுகொண் டரக்க னக்கான்

385. கங்கையும் பிறையுஞ் சூடுங் கண்ணுதல் கரத்து நேமி
சங்கமுந் தரித்தா னுற்ற தறிந்துவந் தூரைச் சாரார்
அங்கவர் தன்மை நிற்க வாரேனு மாக வஞ்சா
திங்குவந் திதனைச சொற்ற தூதனீ யாவ னென்றுன்.

386. இந்திரன் செம்மல் பண்டோரி ராவண னென்பான் றன்னைச்
சுந்தர புயங்க ளோடும் வாலிடைத் தூங்கச சுற்றிச்
சிந்துர கிரிக டாவித் திரிந்தனன் றேவர்க் குண்ண
மந்தர கிரியால் வேலை கலக்கினான் மைந்த னென்றான்.

387. உந்தையென் றுணைவனன்றேயோங்கறஞ்சான்றுமுண்டால
சிந்தனை யிதன்மே லுண்டே நீயவன் றாத னால்
தந்தனெ னினக்கி யானே வானரத் தலைமை தாழா.
வந்தனை நன்று செய்தா யென்னுடை மைந்த வென்றான்.

388. தாதையைக் கொன்றான் பின்னே தலைசுமந் திருகை
நாற்றிப், பேதைய னென்ன வாழுந்தா யென்பதோர் பிழை
யுந் தீர்ந்தாய், சீதையைப் பெற்றே னுன்னைச் சிறுவனு மா
கப் பெற்றேன், ஏதெனக் கரிய தென்றா னிறுதிநாற் கெல்
லை கண்டான்.

389. அந்நா ரின்று நாளை யழிவதற கைய மில்லை
உன்னர சுனக்கே தந்தே னுறுதி யூழி காலம
பொன்னரி சுமந்த பீடத் திமையவர் போற்றி செய்ய
மன்னவ னாக யானே சூட்டுவன் மகுட மென்றான்.

390. அங்கத னதனைக் கேளா வங்கையோ டங்கை தாக்கித்
துங்கவன் றோளு மாபு மிலங்கையுந துளங்க நக்கான்
இங்குநின் றார்கட் கெல்லா மிறுதியே யென்ப துன்னி
நுங்கள்பா னின்று மெம்பாற் போந்தன னும்பி யென்றான்.

391. வாய்தரத் தக்க சொல்லி யென்னையுன் வயனாசெய வாயேல்
ஆய்தரத் தக்க தன்றோ தூதுவந் தரசதாள்கை
நீதரக் கொள்வேன் யானே யிதனினி நிகர்வே றுண்டோ
நாய்தரக் கொள்ளுஞ் சீய நல்லர சென்று நக்கான்.

392. அடுவனே யென்னப் பொங்கி யோங்கிய வரக்க னந்தோ
தொடுவனேகுரங்கைச்சீறிச்சுடாப்படையென்றுதோன்றா
நடுவனே செய்யத் தக்க நானலந தாற்குத் தூத
படுவதே துணிந்தா யாயின் வந்தது பகர்தி யென்றான்.

393. கூவியின் றென்னை நீபோய்த் தன்குல முழுதுங்கொல்லும
பாவியை யெய்தி யஞ்சி யரண்புக்குப் பதுங்கி னானென்
தேவியை விடுக வன்றேற் செருக்களத் தெதிர்ந்து தன்கண்
ஆவியை விடுக வென்றா னருளினம விடுகி லாதான்.

394. பருந்துணைப் பாட்டி யாக்கை படுத்தநாள் படைஞ ரோடு
மருந்தினு மினிய மாமன் மடிந்தநாள் வனத்துள் வைகி
இருந்துழி வந்த நங்கை யிருஞ்செவி முலையு மூக்கும்
அரிந்தநாள் வந்தி லாதா னினிச்செயு மாண்மை யுண்டோ.

395. கிளையொடும் படைஞ ரோடுங் கேடிலா வுயிர்கட் கெல்லாம்
களையன தம்பி மாரை வேரொடுங் களையக் கண்டும்
இளையவன் பிரிய மாய மியற்றியா யிழையை வவ்வும்[டோ.
வளையெயிற் றரக்கன் வெம்போர்க் கினியிவண் வருவதுண்

396. ஏந்திழை தன்னைக் கண்ணுற் றெதிர்ந்தவர் தம்மை யெற்றிச்
சாந்தெனப் புதல்வன் றன்னைத் தரையிடைத் தேய்த்துத் தன்
காந்தெரி மடுத்துத் தானுங் காணவே கடலைத் தாவிப் [னூர்
போந்தபின் வந்தி லாதா னினிப்பொரும் போரு முண்டோ

397. உடைக்குலத் தொற்றர் தம்பா லுயிர்கொடுத் துள்ளக்க
ள்ளந, துடைத்துழி வருணன் வந்து தொழுதுழித் தொழா
த கொறறக், குடைத்தொழி .றம்பி கொள்ளக் கொடுத்து
ழி வேலை கோலி, அடைத்துழி வந்தி லாதா னினிவர வைய
முண்டோ.

398. மறிப்புண்ட தேவர் காண மணிவரைத் தோளின் வை
கும், நெறிப்புணட ரீக மன்ன முகத்தியர் முன்னே நென்
னல், பொறிப்புண்ட ரீகம் போலு மொருவனாற் புனைந்த
மோலி, பறிப்புணடும் வந்தி லாதா னினிப்பொரும் பான்
மை யுண்டோ.

399. என்றிவை யியம்பி வாவென் றேவின னென்னை யெண்ணி
ஒன்றுனக் குறுவ துன்னித் துணிந்துரை யுறுதி பார்க்கின்
துன்றிருங் குழலை விட்டுத் தொழுதுவாழ் சுற்றத் தோடும்
பொன்றுதி யாயி னென்பின் வாயிலிற் புறப்ப டென்றான்.

400. நீரிலே பட்ட சூழ்ந்த நெருப்பிலே பட்ட நீண்ட
பாரிலே பட்ட வானப் பரப்பிலே பட்ட வெல்லாம்
போரிலே பட்டு வீழப் பொருதநீ யொளித்துப் புக்கு
ஊரிலே பட்டா யென்றாற் பழியென வுளையச் சொன்னான்.

(கம்பராமாயணம்). (உக)

# இராமபிரான் பட்டாபிஷேகம்.

---

401. தாயருக் கன்று சார்ந்த கன்றெனுந் தகையா னானான்
மாயையிற் பிரிந்தோர்க் கெல்லாமனோலயம்வந்ததொத்தான்
ஆயிழை யர்க்குக் கண்ணு ளாடிரும் பாவை யானான்
நோய்வுறுத் துலந்தயாக்கைக் குயிர்புகுந் தானு மொத்தான்.

402. எளிவரு முயிர்கட் கெல்லா மீன்றதா யெதிர்ந்த தொத்தான்
அளிவரு மனத்தோர்க் கெல்லா மரும்பத வமுத மானான்
ஒளிவரப் பிறந்த தொத்தா னுலகினுக் கொண்க ணார்க்குத்
தெளிவரு களிப்புச் செய்யுந் தேம்பிழித் தேற லொத்தான்

403. ஆவியங் கவனை லான்மற் றின்மையா லினைய னீங்கக்
காவியங் கழனி நாடு நகரமுங் கவன்று வாழும்
மாவிய லொண்க ணாரு மைந்தரும் வள்ள லெய்த
ஓவிய முயிர்பெற் றாலே யொத்தன ருணர்வு பெற்றார்.

404. சுண்ணமுஞ் சாந்து நெய்யுஞ் சுரிவளை முத்தும் பூவும்
எண்ணெயுங் கலவை யாவி லொழியு மெண்ணில யானை
வண்ணவார் மதமு நீரு மாமதந் தழுவு மாதர்
கண்ணவாம் புனலு மோடிக் கடலையுங் கடந்த வன்றே.

405. மாணிக்கப் பலகை தைத்து வயிரத்தின் கால்கள் சேர்த்தி
ஆணிப்பொன் சுற்று முச்சி யழகுறச் சமைத்த பீடம்
ஏணுற்ற பளிக்கு மாடத் திட்டன ரதனின் மீது [னோ.
சேணுற்ற திரடோள் வீரன் றிருவொடு பொலிந்தான் மன்

406. மங்கல கீதம் பாட மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங் குமுறப் பாண்டி றண்ணுமை யொலிப்பத் தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப் பூமழை பொழிய விண்ணோர்
எங்கணு யகனை வெவ்வே றெதிரபி டேகஞ் செய்தார்.

407. மாதவர் மறைவ லாளர் மந்திரக் கிழவர் மற்றும்
மூதறி வாள ருள்ளஞ் சான்றவர் முதனீ ராட்டச்
சோதிபான் மகனு மற்றைத் துணைவரு மநுமன் றானும்
தீதிலா விலங்கை வேந்தும் பின்னபி டேகஞ் செய்தார்.

408. அரியணை யநுமன் றாங்க வங்கத னுடைவா ளேந்தப்
பரதன்வெண் கவிகை பற்ற விருவருங் கவரி வீச
விரைசெறி மாலை மார்பன் வெண்ணெய்நல் லூரான் றன்ன
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி

409. வெள்ளியும் பொன்னு மென்பார் விதிமுறை மெய்யிற் கொண்
ஒள்ளிய நாளி னல்ல வோரையி னுலக மூன்றும் [ட
துள்ளின குனிப்ப மௌலி சூடினன் சுருதி நான்கும்
தெள்ளிய திருவுந் தெய்வப் பூமியுஞ் செங்க ணானே.

410. சித்தமொத் தனனென் றேதுந் திருநகர்த் தெய்வ நன்னூல்
வித்தக னொருவன் சென்னி மிலைச்சிய தேனு மெய்மை
ஒத்தழ வுலகத் தோர்க்கு முவகையி னிறுதி யுன்னின்
தத்தமுச் சியின்மேல் வைத்த தொத்தது தாம மோலி. (௧0)
(கம்பராமாயணம்.)

## சிவபெருமான்
## மாமனாகவந்து வழக்குரைத்தது.

411. கன்னிநான் மாடக் கூடற் கடிநகர் வணிக மாக்க [ளான்
டன்னின்மா நிதிக்கோ னன்னான் றனபதி யென்னும் பே
மன்னிமனை யாளாங் கற்பின் மடவரல் சுசீலை யென்பாள் [ள்.
பொன்னினுண் முளரிச் சேக்கைப் புண்ணியத் திருவி னன்னா

412. எனவிவா தமக்கு மைந்தற் பேறின்றி யிரங்கு நாளிற்
றனபதி மருகன் றன்னைத் தகவுசான் மகவாக் கொண்டு, ம
னமகிழ் சிறப்பா லக மனைவியுந் தொழுது வாங்கிப், பு
னைவன புனைந்து போற்றிப் பொலிவுற வளர்த்துக் கொ
ண்டாள்.

413. தனபதி மகப்பே றின்றா ளாயினுந் தணவாக் காதன்
மனைவிமேல் வைத்த வாசை மயக்கினால் வருந்தி யீன்ற
தனையனை மகவாத் தந்த தங்கைமேற் றீராப் பூசல் [ல்வாள்.
வினைவிளைத் தொழுக வோர்நா ளிளையவள் வெகுண்டு சொ

414. பெருமித முனக்கேன் பிள்ளைப் பேறற்ற பாவி நீயென்
னருமைமைந் தன்மக னலன்றோ விருமையு முடைவா யென்னப்
பெரிதுநா ணடைந்து மேலைக் காயினும் பிள்ளைப் பேறு
தருதவம் புரிவே னென்னாத் தனபதி தவமேற் செல்வான்.

415. தன்பெருஞ் செல்வ மெல்லா மருமகன் றனக்கே யாக்கி
யன்புகொண் மனைவி யோடு மருந்தவ நெறியிற் சென்றான்
பின்பவன் வரவு தாழ்ப்ப மருமகன் பெற்ற வெல்லாம்
வன்பினால் வழக்குப் பேசி வௌவினார் தாய மாக்கள்.

416. விளைநில னடிமை பைம்பூண் வெறுக்கைநன் பசுக்க ளேனை
வளனுமாற் றவர்கைக் கொள்ள வன்சிறை யிழந்த புட்போற்
றளர்வுறு மகனுந் தாயுஞ் சார்பிலார் தமம னோர்க்கோர்
களைகணா யிருக்குங் கூடற் கடவுளே சரண மென்னா.

417. வந்துவா னகடு போழ்ந்த மணிமுடி விமானக் கோயிற்
சுந்தர நாதன் பாதத் துணைதொழு திறைஞ்சி யார்க்குந்
தந்தையுந் தாயு மாகுந் தம்பிரா னீரே யெங்கட்
கெந்தையும் யாயு மென்னா விரங்கினின் றினைய சொல்வாள்.

418. என்மகன் றன்னை யைந்த னிளமையா லெவருங் காணத்
தன்மக னாகக் கொண்டு தகுதியா லன்றே காணி
பொன்மனை பிறவு நல்கிப் போயினானெமமுனிப்பால்[டார்
வன்மையாற் றாயத் தார்க ளவையெலாம வௌவிக்கொண்

419. ஒருத்திநா னொருத்திக் கிந்த வொருமகனிவனுந் தேறுங்
கருத்திலாச் சிறியன் வேறு களைகணுங் காணே னைய
வருத்திசா லறவோர் தேறு மருட்பெருங் கடலே யெங்கு
மிருத்திநீ யறியாய்கொல்லோவென் றுபார் படியவீழ்ந்தாள்

420. மாறுகொள் வழக்குத் தீர்க்க வல்லவ ரருளினாலே [ய்யி
சீறுகொள் வடிவேற் கண்ணாள் சிறுதுயி லடைந்தாண் மெ
ஊறுகொள் கரண மைந்து முற்றநீ கனவிற் கங்கை [வார்.
யாறுகொள் சடையார் வேதச செல்வரா யடுததுச சொல்

421. புலர்ந்தபின் றாயத் தோரைப் புரவல னாணை யாற்றால்
வலந்தரு மன்றத் தேற்றி மறித்தனை யிருத்தி யாம்போந்
தலந்தரு மறிவான் மூத்தோ ரனைவரு மிசைய வந்தச்
சலந்தரு வழக்குத் தீர்த்துத் தருகுவம போதியென்றார்.

422. வேரியங் குவளை யுண்கண் விழித்தனள் வியந்து கெட்
டே, னாருமில் லார்க்குத் தெய்வந் துணையென்ப தறிந்தே
னென்னாக், காரிருங் கயலுண் கண்ணாள் கணவனைத் தொழு
து வாழ்த்திச், சீரிளங் குமர னோடுந் தெரிவைதன் மனையி
ற் சென்றாள்,

423. சென்றவள் கங்கு லெல்லை தெரிந்தபி னெழுந்து வெள்ளி
மன்றவன் கோயில் வாயில் வந்துவந் தனைசெய் தம்பொற்
குன்றவ னுரைத்தவாற்றாற் கொடுமைசால் வழக்குப் பூட்டி
வென்றவ ரிருக்கை யெய்தி விளம்புவாள் பலருங் கேட்ப.

424. அட்டில்வாய் நெருப்பி டேலோ ரடியிடே லறத்தா றன்
றிப், பட்டிமை வழக்கால வென்று போகொட்டேன் பலரு
ங் கெட்க, விடடன னரச னாணை யறத்தவி சேறி யான்றோ,
ரொட்டிய படிகேட் டெங்க ளுரிப்பொரு டந்து போமின்.

425. என்றவண் மறித்த லோடு மிழுக்குரை யாடி வைது
வன்றிறல் வலியரா தள்ளி யடித்தனர் மைந்த ரோடுஞ்
சென்றனண் முறையோ வென்னுத திருந்தறத் தவிசி னோர்மு
னின்றுரை யாடி னுள்கேட டறிந்தனா நீதி நூலோர்.

426. அறத்தவி சிருப்போ ரேவ லாடவ ரோடும போந்து
மறிந்தவைக் களத்திற் கூட்டி வந்தனள் வந்த வெல்லை
யறக்கொடி பாகர் வெள்ளி யம்பல வாணர் தாமத்
திறத்தன பதியே யென்னத திருவுருக் கொண்டு செல்வார்

427. அரசனிங் கில்லை கொல்லோ வான்றவ ரிலலை கொல்லோ
குரைகழல் வேந்தன் செஙகோல கொடியதோகோதினால்க
ளுரைசெயுந் தெய்வந தானு மிலலைகொ லுறுதி யான
தருமமெங் கொளித்த தேகொ லென்றறத் தவிசிற் சார்வார்

428. தனபதி வரவு நோக்கி வஞ்சனைத் தாயத தார்க
ளினைவுறு மனத்த ராகி விமமித மெய்தி வெல்லு
மனவலி யிழந்து பண்டு வழக்கலா வழக்கால் வென்ற
வினைநினை துள்ள மரச னாணினால் விழுங்கப் பட்டார்.

429. மாதுல ராகி வந்தோர் மருகனைத் தம்பினை வந்த
தாதுல ராத கோதை தன்னொடுந் தழீஇத்தங் கண்ட
மீதுல ராத சாம வேதமாப் பவர்போல் வாய்விட்
டாதுல ரானீ ரந்தோ வையவென் றழுது நைந்தார்.

430. குடங்கையி னெடுங்க ணாளுங் குமரனும் வணிகன் றனிற்
றடங்கணீ ராட்ட வீழ்ந்தார் தடக்கையா லெடுத்துப் புல்லி
மடங்கலே றனையான் றானு மற்றவர் தமைத்தன் கண்ணீர்
நெடுங்கடல் வெள்ளத்தாழத்திக் குமரனை நேர்ந்துரைப்பான்,

439. அனையது கேட்ட வான்றோ ரனைவரு நோக்கி யந்தத்
தனபதி வணிகர் தாமே யிவரெனச் சாற்ற லோடு
மனவலித் தாயத் தாரத்தம வழக்கிழுக் கடைந்த தீது
நனைவழி வேமபன் றேரிற் றணடிக்கு நமமை யென்று.

440. இல்லினுக் கேகி மீளவன யாரெனனாறுங் குளாத்திற் கே
கி, யொல்லையில் வருவே னென்று மொவ்வொரு வார்த்
தை யிட்டு, வலலெழு வனைய தோளா ரனைவரும வன்கா
றளளச், செல்லெழு முகிலபோற் கூட்டஞ் சிதைந்தன
ரோளித்துப் போனார்.

411. அனையவர் போக நின்ற வறனவின மன்றத் தவையோரா
தனபதி வணிகர் தந்த தனமெலா நுதத மைந்தற
கெனமனை யெழுதி வாங்கி யீந்தன ரீந்த வெல்லை
மனமொழி கடந்த நாயகர் மறைந்துங் கோயில புக்கார்.

442. இமமெனப பலருங் காண மறைந்தவ ரிருந்தண கூடற
செமமலெனா றறிந்து நாயகர் நிலவனுக குவளைத் தாங்க
விமமித மடைந்து வேந்தன் வரிசையாள வெறுப்ப நல்கிக்
கைதமப றி வணிகர் கோயில புகுந்தமைந்தனுக் கணகங் கொண்டு.

திருவிளையாடற்புராணம்.) (௬௨)

---

## வாசுதேவனைப் படைத்துணையழைத்தல்.

---

443. புரோகிதன் றூது வந்து போனபின் புயங்க கேது
விரோசனன் சுதனைக் கங்கா சுதனெடும வெகுளி மாற்றித்
துரோணனை முதலா மிக்க தொனமதி யமைசச ரோடுஞ்
சரோருக சதனை மெனனாந் தனித்திருந் தெண்ணி னானே.

444. தேயமெங் கெங்குஞ் செங்கோல செலுத்துமத் திகிரிவேந்த
ராயவர் தமமைக் கூட்ட வமைவினிற் றூது போக்கிக்
காயமு முயிரு மாகிப் பொருடொறுங் கலந்து நின்ற
மாயவன் றனனைக் கூட்ட வளர்மதிற் றுவரை சேர்ந்தான்.

445. மாடநீள் வீதி மூதூர் வயங்குமா மதிலின் றோற்ற
மேடவிழ் துளப மாலங் கிருந்தன னென்று கேட்டுச்
சேடன்வந் தனந்த கோடி செங்கதிர் மணியின் பத்திச்
சூடிகா மகுடத் தோடுஞ் சூழ்ந்ததோர் தோற்றம போலும்.

446. கார்க்கடல் வண்ணன் றன்பாற் கண்டுயிலொழிந்துபோந்து
மேற்கடற் றுவரை மூதூர் மேவரும் விரகு நோக்கிப்
போர்க்கடற்பொறிகள்யாவும்பொறித்தவப்புரிசைதன்னைப்
பாற்கடல் வளைத்த தொக்கும் பன்மல ரகழி யம்மா.

447. ஈண்டுநீ வரினு மெங்க ளெழிலுடை யெழிலி வண்ணன்
பாண்டவர் தங்கட் கல்லாற் படைத்துணை யாக மாட்டான்
மீண்டுபோ கென்றென் றந்த வியன்மதிற் குடுமி தோறுங்
காண்டகு பதாகை யாடை கைகளாற் றடுப்ப போன்ற.

448. அருள்குடி யிருக்குங் கண்ணு னவதரித் தனனென் றெண்
தரணியின் மீது வந்து தன்னுடைச் சோதி வைகும் [ணித்
பரமமா ஞான போகப் பதிகுடி யிருந்த தன்ன
திருநகர் வீதி புக்கான் சித்தசித் துணர்வி லாதான்.

449. வந்தமை யறிந்து கொற்ற வாயிலோா தம்மை நோக்கி
யந்தன்மா மதலை வந்தா லறிவியா தலைழமி னென்று
சந்திர னொடுங்கி நிற்பத் தபனனே சரிக்கு மாறு [டான்.
பந்தனை யிலாதான யோகத் துயில்வரப் பள்ளி கொண்

450. பொற்புடைப் புனிதன் கோயிற் புறத்தினி லனிக நிற்பச்
சற்பவெம் பதாகை வேந்தன் றடையறத் தனிசென் றெய்தி
யுற்பல வண்ணன் பள்ளி யுணாதரு கானு மிட்ட
சிற்பவண் டவிசி னேறித் திருமுடிப் பக்கஞ் சேர்ந்தான்.

451. வந்திலன் விசய னென்று வானுறுயில் புரிந்த வண்ணல்
சிந்தனை செய்யும் வேலைச் சிந்தையிற் கடிய தேரோன்
பந்தனை யறுக்கு ம பாத பங்கயம் பணிந்து நிற்ப
முந்துற விழித்து நோக்கி முகமலர்ந் தருள்செய் தானே.

452. நின்றவ னிருந்த வேந்தன் வரவினை நிகழ்த்த நேமிப்
பொன்றிகழ் படையோ னந்தப் பொய்த்துயிற் பாய னீங்கி
மன்றலந் தொடையல் மார்பன் வரவெமக் குரைசெயாதென்
னென்றுரா நெருங்கப புல்லி யின்சொலா லுவகை செய்தான்

453. இருவிரும் வந்த வாறென் னியம்புதி ரென்று வாச
மருவிரி துளப மாலை மரகத வண்ணன் கேட்பச்
செருவினி யெமக்கு வெம்போர் செயதுணை யாக வேண்டும்
பொருவிலோ யென்று கொண்டவ் விருவரும் புகன்றகாலை.

454. உற்றம ருதவி செய்வா னுதிட்டிரன் றனக்கு முன்னே
சொற்றன மாங்க ணிங்குந் துயிலுணர் பொழுதத் தின்று
விற்றிறல் விசயன் முந்த விழிக்கிலக் கானு னென்று
பற்றறத் துணிந்து சொன்னான் பாண்டவர் சகாய னானான்.

455. முடைகமழ் முல்லை மாலை முடியவன் றன்னைப் போரிற்
படையெடா தொழிமி னென்று பன்னக துவசன் வேண்ட
நெடியமா முகிலு நேர்ந்து நினக்கினி விசய போரி
லடுபடையின்றிச் செய்யுமாண்மையென்னறைதியென்றான்.

456. செருமலி யாழி யங்கைச் செழுஞ்சுடர் நின்றென் றேரிற்
பொருபரி தூண்டி னிந்தப் பூதலத் தரச ரொன்றோ
வெருவருமியக்கர் விண்ணோர் விஞ்சையரெனினுமென்கை
வரிசிலை குழைய வாங்கி மணித்தலை துமிப்ப னென்றான்.

457. அடர்சிலை விசய னிவ்வா றிசைத்தலு மமலன் வஞ்சப்
படவர வுயர்த்த வென்றிப் பார்த்திவன் றன்னை நோக்கி
நடையுடைப் புரவித் திண்டேர் நானிவற் கூர்வ தன்றி
மிடைபடையேவி நும்மோடமர்செயேன் வேந்தவென்றான்.

458. எம்மையே யொழிய வுள்ள யாதவக் குலத்து ளோர்க
டம்மையு மெம்மு னோன்றாலகே துவையுஞ் சேரச்
செம்மையோ டுதவி யாகக் கொணர்நீ செல்க வென்று
மும்மையு முணர்ந்த நாதன் முனனுறப் பின்னுஞ்சொன்னான்.

459. கிருதவன் யாவக் குரோணி கிரா படை யோடு நின்பால்
வருவனென்ன வுணர்த்து வேண்டு மதுரவாய் மைகளுங் கூறி
மருநுபோபுகந்திட்டசெங்கண்மாயவன்விடுப்பவேகிக்(டான்.
கருதலான் வினைய மொன்றுங் கண்ணன்முன் னோனைக்கண்

460. கண்ணனங் கருளிச் செயத கட்டுரைப் படியே சங்க
வண்ணனுக் கிவாவல் சொன்ன மாற்றமு மரசன் சாற்றி
யெண்ணருந் தொகைகொள் சேனை யாதவ குமர ரோடே
யண்ணலே வருகென் றோதி யத்தினா புரிபுக் கானே.

461. கூறிய வேந்த னாகக் கொடியவ னகன்ற பின்னர்த்
தேறிய விசய னோடுஞ் செழும்புனற் றுவரை நீங்கி
யாறிரு நாமத் தோனு மையிரு நாமத் தோனு
மூறிய கருணை நெஞ்சி னுதிட்டிர னிருக்கை புக்கார். (கக)

(வில்லிபுத்தூராழ்வார் பாரதம்.)

# இராசதருமம்

462. பால்வளை பரந்து மேயும் படுகடல் வளாக மெல்லாங்
கோல்வளை யாமற் காத்துன் குடைநிழற் றுஞ்ச நோக்கி
நூல்விளைந் தனைய நுண்சொற் புலவரோ டறத்தை யோம்
மேல்விளை யாத வின்பம் வேந்தமற் றில்லை கண்டாய் (பின்

463. வாய்ப்படுங் கேடு மின்றாம் வரிசையி னறிந்து நாளுங்
காய்த்தநெற் கவளந் தீற்றிற் களிறுதான் கழனி மேயின்
வாய்ப்பட லின்றிப் பொன்றும் வல்லனாய் மன்னன் கொள்ளி
னீத்தநீர் ஞால மெல்லா நிதிநின்று சுரக்கு மன்றே.

464. நெல்லுயிர் மாந்தர்க் கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற்
புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை
மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலந் தன்னு ளுமவே னம்பி யென்றான்.

465. ஆர்வலஞ் சூழ்ந்த வாழி யலைமணித் தேரை வல்லா
னோர்நிலத் தூரு மாயி னிடுபல் காலஞ் செல்லு
மூர்வல மறித றேற்றா தூருமேன் முறிந்து வீழுந்
தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே.

466. காய்ந்தெறி கடுங்கற் றன்னைக் கவுட்கொண்ட களிறு போல
வாய்ந்தறி வுடைய ராகி யருளொடு வெகுளி மாற்றி
வேந்தர்தாம் விழைப வெல்லாம் வெளிப்படார் மறைத்தல்
நாந்தக வுழவ ரேறே நன்பொரு ளாவ தென்றான். (கண்டாய்

467. குடிபழி யாமை யோம்பிற் கொற்றவேன் மன்னர் மற்றுன்
அடிவழிப் படுவர் கண்டா யரும்புகழ் கெடுத லஞ்சி
நொடியலோ ரொழுத்தும் பொய்யை நுண்கலை நீத்த நீந்திக்(ன்
கொடியெடுத் தவர்க்கு நல்கு கொழித்துணர் குமர வென்று
(சீவகசிந்தாமணி)

468. காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து

மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே.

469. கால்பார் கோத்து ஞாலத் தியக்குங்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே
உய்த்த றேற்றா னாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு
மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே.

470. நெல்லு முயி ரன்றே நீரு முயி ரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே. (க)

(புறநானூறு)

## பெறுதற்கருமை

471. பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுட்
டிரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி
யரச வந்துளை யகவயிற் செறிந்தென வரிதாற்
பெரிய சன்மங்கள் பிழைத்திவண் மானிடம் பெறலே.

472. விண்டு வேய்நர லுன்விளை கானவ ரிடனுங்
கொண்டு கூமபனி குலைத்திடு நிலைகளக் குறும்பும
உண்டு நீசொன வுரையினு மரியன வொருவி
மண்டு நீர்ப்புனல் வளங்கெழு நாடெய்த லரிதே.

473. வில்லின் மாக்கொலை வெண்ணிணத் தடிவிளிம் படுத்த
பல்வி னோர்களும் படுகடற் பரதவர் முதலா
வெல்லை நீங்கிய விழிதொழில் விழிகுல மொருவி
நல்ல தொல்குலம் பெறுதலு நரபதி யரிதே.

474. கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநா
ளருவி போற்றொடர்ந் தருதன வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையா
துருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே.

475. காம னன்னதோர் கழிவனப் பறிவொடு பெறினும்
நாம நாற்கதி நவைதரு நெறிபல வொருவி
வாம னூனெறி வழுவறத் தழுவின ரொழுக
லேம வெண்குடை யிறைவமற் றியாவது மரிதே. (௫)

(சீவகசிந்தாமணி)

## பாரியின் வள்ளன்மை.

476. நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா வாங்கு
மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே.

477. பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.

478. கடந்தடு தானை மூவிருங் கூடி
யுடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியு முளமே
குன்று முண்டுநீர் பாடினிர் செலினே.

479. அளிதோ தானே பாரியது குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ வரிதே
நீலத் திணைமலர் புரையு முண்கட்
கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே. (௪)

(புறநானூறு)

## மக்கட்பேறு.

480. படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணு
முடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து

மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே. (க)

(புறநானூறு.)

---

## ஆற்றுவரி. (காவேரி)

481. உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த தெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி.

482. மருங்குவண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்த தெல்லா நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன் வாழி காவேரி.

483. பூவர் சோலை மயிலாடப் புரிந்து குயில்க ளிசைபாடக்
காமர் மாலை யருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை யருகசைய நடந்த தெல்லா நின்கணவன்
நாம வேலின் றிறங்கண்டே யறிந்தேன் வாழி காவேரி.

484. வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியா தொழுக லுயிரோம்பு
மாழியாள்வான் பகல்வெய்யோ னருளே வாழி காவேரி. (உ)

(சிலப்பதிகாரம்.)

---

## அம்மானைவரி.

485. வீங்குநீர் வேலி யுலகாண்டு விண்ணவர்கோ
னோங்கரணங் காத்த வுரவோன்யா ரம்மானை
யோங்கரணங் காத்த வுரவோ னுயர்விசும்பிற்
றூங்கெயின் மூன்றெறிந்த சோழன்கா ணம்மானை
சோழன் புகார்நகரம் பாடேலோ ரம்மானை.

486. புறவுநிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்யா ரம்மானை
குறைவி லுடம்பரிந்த கொற்றவன்முன் வந்த
கறவை முறைசெய்த காவலன்கா ணம்மானை
காவலன் பூம்புகார் பாடேலோ ரம்மானை.

487. கடவரைக ளோரெட்டுங் கண்ணிமையார் காண
வடவரைமேல் வாள்வேங்கை யேற்றினன்யா ரம்மானை
வடவரைமேல் வாள்வேங்கை யேற்றினன் றிக்கெட்டுங்
குடைநிழலிற் கொண்டளித்த கொற்றவன்கா ணம்மானை
கொற்றவன்றன் பூம்புகார் பாடேலோ ரம்மானை. (ரு.)

(சிலப்பதிகாரம்)

## கந்துகவரி.

488. பொன்னிலங்கு பூங்கொடி பொலஞ்செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைக ளார்ப்பவார்ப்ப வெங்கணுந்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந்த டித்துமே.

489. பின்னுமுன்னு மெங்கணும்பெ யர்ந்துவந்தெ ழுந்துலாய்
மின்னுமின்னி ளங்கொடி வியனிலத்தி ழிந்தெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந்த டித்துமே.

490. துன்னிவந்து கைத்தலத்தி ருந்ததில்லை நீணிலந்
தன்னினின்று மந்தரத்தெ ழுந்ததில்லை தானெனத்
தென்னன்வாழ்க வாழ்கவென்று சென்றுபந்த டித்துமே
தேவரார மார்பன்வாழ்க வென்றுபந்த டித்துமே. (௩)

(சிலப்பதிகாரம்)

## ஊசல்வரி

491. வடங்கொண் மணியூசன் மேலிரீஇ ஐயை
யுடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமே லூக்கக்
கடம்பு முதறடிந்த காவலனைப் பாடிக்
குடங்கைநெடுங் கண்பிறழ வாடாமோ வூசல்
கொடுவிற் பொறிபாடி யாடாமோ வூசல்.

492. ஓரைவ ரீரைம் பதின்ம ருடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் றிறம்பாடிக்
கார்செய் குழலாட வாடாமோ வூசல்
கடம்பெறிந்த வாபாடி யாடாமோ வூசல்.

493. வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கற்
றென்குமரி யாண்ட செருவிற் கயற்புலியான்
மன்பதைகாக்குங் கோமான் மன்னன் றிறம்பாடி
மின்செ யிடைநுடங்க வாடாமோ வூசல்
விறல்விற் பொறிபாடி யாடாமோ வூசல். (ரு)

(சிலப்பதிகாரம்.)

## ஆய்ச்சியர்குரவை.

494. வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே.

495. அறுபொரு ளிவனென்றே யமரர்கணந் தொழுதேத்த
உறுபசியொன் றின்றியே யுலகடைய வுண்டனையே
உண்டவாய் களவினா லுறிவெண்ணெ யுண்டவாய்
வண்டுழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே.

496. திரண்டமரர் தொழுதேத்துந் திருமாலின் செங்கமல
விரண்டடியான் மூவுலகு மிருளகல நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே.

வேறு.

497. மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே.

498. பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே.

499. மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்
கடந்தானை நூற்றுவர்பா னாற்றிசையும் போற்றத்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே. (கூ)
(சிலப்பதிகாரம்

## அறவுரை.

500. * * *
* * *

தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்
பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் றெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் டுறமின் னுயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்மின் றவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் றீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமின்
அறமனை காமி னல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென.
(சிலப்பதிகாரம்)

செய்யுட்டிரட்டு முற்றிற்று.